356. எலிக்குப் பயந்து வீட்டைச் சுட்டாற் போல.

Like burning down one's house for fear of the rats.

---

357. எலிக்குமணியமறுக்கிறது.

It is the business of the rat to nibble.

---

358. எருவுக்குப்போனவன் எலுமிச்சம்பழமெடுத்தது போல.

It is like one taking a lemon who had gone for dung.

---

359. எச்சிலைக் கழுவியுஞ் சுற்றத்திலே வார்.

Though the washing of the hands be all you can do, pour even that out to relatives.

---

360. எரிகிற கொள்ளியிலே எந்தக் கொள்ளி நல்ல கொள்ளி?

Which is the best of the burning fire-brands?

---

361. எட்டியுடனே சேர்ந்த இலவுந் தீப்பட்டது.

The cotton tree is consumed with the poisonous tree.

---

362. எழுந்திருப்பான் காலில்லை.

He can rise, but is without feet.

---

363. எண்சாணுடம்பும் ஒருசாணுடம்பானேன்.

The eight span body is become one span.

---

364. என்குடி கெட்டதுமுன்குடி கெட்டதும் விடிந்தாற் றெரியும்.

Whether my household is destroyed or yours will be known at day-break.

---

365. எல்லாவேலையுஞ் செய்வான் செத்தாற் பிழைக்க மாட்டான்.

He can do every thing, but when dead, he cannot resuscitate himself.

---

366. எட்டிபழுத்தென்ன ஈயாதார் வாழ்ந்தென்ன?

What is the fruitfulness of the poison tree? what is the prosperity of the stingy?

---

367. எருமையிலும் வெள்ளாடு ஏறக்கறக்குமோ?

Can you obtain more milk from the goat than from the buffalo?

---

368 எங்கேபுகை யுண்டோவங்கே யழலுண்டு.

Wherever there is smoke there is fire.

---

369. எருதின்வலி காகமறியுமோ?

Does the crow consider the power of the ox?

---

370. எல்லாருங் கப்பலேறியாயிற்று இனியம்மானார் க ப்பலேறிப் பொற்பட்டங் கட்டப்போகிறார்.

All who embarked have abandoned the enterprize, now my uncle is embarking to obtain head ornaments.

---

371. எறிகிறது முயலுக்குப் படுகிறதுபற்றைக்கு.

Throwing at a hare and hitting a bush.

---

372. எலுமிச்சைக் கனிக்குப் புளிசேர்க்க வேண்டுமா!

Is it necessary to add acid to the lemon?

---

373. எண்ணியகுடிக்கொரு மின்னியகுடி.

An illustrious family among the eminent.

---

374. எல்லாருக்குஞ் சனியன் தும்புபோலே எனக்குச் சனியனெருமை போலே.

Saturn is as a rush to others, but to me he is like a buffalo.

---

375. எனக்கட்டமத்துச் சனிபிடித்தது.

Saturn has seized me at an inauspicious juncture.

---

376. எருதுமறைவிற் புல்லுத்தின்கிறாயா?

Dost thou eat grass concealed by an ox?

---

377. என்னதின்றாலும் அதற்குமேலே நாலுபேரீச்சம்ப
ழந்தின்ன எல்லாமடிபடும்.

Eat as much as you will; four dates eaten afterwards will settle the whole.

---

378. எச்சிலைக் குடித்துத் தாகந்தீருமா?

Can one quench his thirst by drinking spittle?

---

379. என்னீரலைக் கருக்கரிவாள் கொண்டறுக்கிறது.

Cutting my liver with a sharp saw.

---

380. எலியம்மணத்தோடே போகின்றதென்கிறான்.

He says that the rat goes naked.

---

381. என்பைத்தின்று சதையைக் கொடுத்து வளர்த்தா
யே.

Having eaten the bones thyself, thou hast nourished them with the flesh.

---

382. எனக்கூணுமில்லை யுறக்கமுமில்லை.

Neither food nor sleep.

---

383. எனதுநாட்களெல்லாம் ஊமை கண்ட கனாப்போ
லாயின.

All my days are lost as the dream of the dumb.

---

384. எடுப்பாரும் பிடிப்பாரு முண்டானால் இளைப்புந் தவிப்பும் மெத்தவுண்டு.

Where there are many attendants sufferings are excessive.

385. எலிபுற்றெடுக்கப் பாம்பு குடிகொள்ளுகிறது.

The rat makes the hole, but the snake takes possession.

386. எண்ணமெல்லாம் பொய்யாகும் லிகிதம் மெய்யாகும்.

All conjecture is false, writing is true.

387. எட்டினால் மயிர்பிடிக்கிறது எட்டாதிருந்தாற் கால் பிடிக்கிறது.

Seizing by the hair if he can reach, but if not by the feet.

388. எலியைக்கண்டு பூனை ஏங்கிப்பயங்கிக்கிடக்கிறதாம்.

It said that the cat is alarmed at the sight of a rat.

389. எள்ளுங்கரும்பும் நசுக்கினாற் பலனுண்டு.

Rape seed and sugar-cane are profitable when crushed.

390. எடுத்தார் கையிற் பிள்ளை.

A child in the arms.

391. எட்டாப்பூத் தெய்வத்துக்கு.

The flower which is out of the reach is dedicated to God.

---

392. எள்ளுக்கேழுழவுழுகிற வேளை வெள்ளாளா கொள்ளுக்கோருழவுழுது பயிர்ச்செய்.

O poor plough-man who ploughest seven times for rape seed, plough once and sow gram.

---

393. எண்ணெய்க்குடத்தைச் சுற்றுமெறும்புபோல.

Like the ants round the oil pot.

---

394. என்முகத்திற் கரிபூசினையே.

You have rubbed charcoal on my face.

---

395. எறும்பு முட்டை கொண்டு திட்டையேறின் மழை பெய்தது.

It has rained, for the ants are carrying their eggs to higher ground.

---

396. எத்தனைதரம் விளக்கினாலும் பித்தளைநாற்றம்போகாது.

The smell of brass will remain however it is burnished.

---

397. எதெப்படிப் போனாலுந் தன்காரியந் தான்பார்க்க வேண்டும்.

No matter what becoms of others' affairs attend to your own.

398. எறும்புக்குந் தன்கையாலெண் சாணுடம்பு.

The ant, measured by its own hand, is eight span long.

---

399. ஏரி நிறைந்தாற் கரை கசியும்.

If the pond be full the border will be moist.

---

400. ஏண்டா முடிச்சவிழ்த்தாய் என்பசியுனக்குத் தெரியுமா?

O thou hast untied the knot: art thou aware that I am hungry?

---

401. ஏறவிட்டேணியை வாங்கினது போல.

Like removing the ladder one has ascended.

---

402. ஏறப்படாத மரத்திலே எண்ணப்படாத காய்.

The fruit on a tree no one has ascended is without number.

---

403. ஏழையழுத கண்ணீர் கூரிய வாளுக்குச் சரி.

The tears of the oppressed are like sharp swords.

---

404. ஏர் பிடித்தவனென்ன செய்வான் பானை பிடித்தவள் பாக்கியவாட்டி.

What can the plough-man do? She who has the cooking utensils is wealthy.

---

420. ஒரு குடம்பாலுக்கொரு துள்ளி உறைமோர்.

One drop of butter-milk is put into the pot of milk.

---

421. ஒருதாயில்லாதவருக்கூரெல்லாந் தாய்.

The whole country is mother to the motherless.

---

422. ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்க்கிறது.

One grain of boiling rice is a sample of the whole pot.

---

423. ஒருகை தட்டினலோசையா? இருகைதட்டினலோசையா?

Can the sound of clapping be produced with one hand or with two?

---

424. ஒருவர் அறிந்தால் இராசியம் இருவரறிந்தாற் பராசியம்.

If one only knows the matter it is secret, if two it is public.

---

425. ஒழுக்கு வீட்டிலே வெள்ளம் வந்தது போல.

As a flood in the leaky house.

---

426. ஒரு சாண்காட்டிலே ஒரு முழத்தடி வெட்டலாமா?

Can a stick a cubit long be cut among shrubs a span high?

427. ஒளிக்கப் போயுந் தலையாரி வீட்டிலேயொளித்தாற் போல.

As one seeking concealment hides himself in the house of the Chief.

---

428. ஒருவனைப்பற்றி ஓரகத்திரு.

Abide where you have a friend.

---

429. ஒருகாசு கொடாதவனொருவராகன் கொடுப்பானோ?

Can he who cannot give a cash pay a mohur?

---

430. ஒருகாசென்றவிடத்திலழுகிறன்.

He weeps when the word cash is pronounced.

---

431. ஒடிந்த கோலானாலும் ஊன்று கோலாகும்.

Though a broken staff it may serve as a walking stick.

---

432. ஒரு மிளகுக்கு ஆற்றைக்கட்டியிறைத்தசெட்டி.

A merchant that drained the river and drew off the water, in order to find a grain of pepper he had lost.

---

433. ஒரு குண்டிலே கோட்டை பிடிக்கலாமா!

Can a fort be taken with one bullet?

434. ஒருகூடு முடைந்தவனொன்பது கூடு முடைவான்.
He who has platted one basket may make nine.

---

435. ஒளியில்லாவிட்டாலிருள். இருளில்லாவிட்டாலொளி.

When there is no light there is darkness. When no darkness there is light.

---

436. ஒருக்காற் செய்தவனிருக்காற் செய்வான்.
He who has done a thing once may perform it again.

---

437. ஒருவிரல் நொடியிடாது.
One finger will not snap.

---

438. ஒருமிப்பில்லாத குடி ஒருமிக்கக் கெடும்.
The divided household will have an undivided destruction.

---

439. ஒருதலை வழக்கு நூலிலுஞ் செவ்வை.
The evidence in a suit where only one party is heard; is straighter than a line.

---

440. ஒருகோபம் வந்து கிணற்றில் விழுந்தால் ஆயிரஞ் சந்தோஷம் வந்தாலுமெழும்பலாமா?
When one has fallen into a well through a sin-

gle fit of anger, with a thousand joyous considerations lift him out?

---

441. ஒள்ளியர் தெள்ளியராயினுமூழ்வினை மெள்ளநு ழைந்துவிடும்.

'Though ever so prudent and skilful the effects of destiny will insinuate themselves.

---

442. ஓடியுங் கிழவிக்குப் பிறகேயா!

With all his running is he behind the old woman?

---

443. ஓடியொருகோடி தேடுவதிலுமிருந்தொரு காசுதேடுவது நலம்.

A single cash acquired in quietude is worth a crore acquired by bustle.

---

444. ஓடம்விட்டவிடமடிச்சுடும் அடிச்சுட்டவிடமோடம் விடும்.

The foot may be burnt where ships have sailed and ships may sail where the foot was burnt.

---

445. ஓட்டை மணியானாலும் ஓசை நீங்குமா!

Though a bell be porous will it lose its sound?

---

446. ஓடிய முயற் பெரிய முயலல்லவோ!

The hare that has escaped is a great one, is it not?

447. ஊருக்கொரு வழியா?
Is there only one road to the country?

---

448. ஓடவும் மாட்டேன் பிடிக்கவும் மாட்டேன்.
I will neither run, nor will I take hold.

---

449. ஓந்தி வேலிக்கிழுக்கின்றது தவளை தண்ணீருக்கிழுக்கின்றது.
The lizard seeks the hedge and the frog the water.

---

450. ஓடங் கடந்தாலோடக்காரனுக்கொருசொட்டு.
A cuff for the boatman after crossing the river.

---

451. ஓடம் வண்டியிலேறும், வண்டியோட மேறும்.
A boat may be conveyed in a cart, or a cart in a boat.

---

452. கருப்பங் கட்டியிலுங் கல்லிருக்கும்,
There are stones even in sugar.

---

453. கயிறில்லாப் பம்பரம்போல.
Like a top without a string.

---

454. கடைத் தேங்காயெடுத்து வழிப்பிள்ளையாருக் கடித்தசம்பந்தம்.
Like taking a cocoanut from the bazaar and breaking it to Ganesa by the way-side.

455. கறக்கிற துழக்கு உதைக்கிறது பல்லுப்போக
Yielding half a pint and kicking out the teeth.

---

456. கடன் காரனை வைத்தகழுவுண்டா?
Is there a stake for transfixing debtors?

---

457. கண்ணைக் கெடுத்த தெய்வம் புத்தியைக் கொடுக்கும்.
The God that destroyed the eye will give wisdom.

---

458. கள்ளமாடு சந்தையேறாது.
The stolen cow will not appear in the market.

---

459. கந்தையானாலுங் கசக்கியுடுத்து.
Though only a rag put it on neatly.

---

460. கரணந் தப்பினால் மரணம்.
If he fail in his feat it is death.

---

461. கற்றவிடத்திலே வித்தைகாண்பிக்கலாமா?
Can learning be exhibited where it is acquired?

---

462. கண்டுங் காணவில்லைக் கேட்டுங் கேட்கவில்லை யென்றிருக்க வேண்டும்.
Seeing, see not, hearing hear not.

463. கனவுகண்ட பணஞ் செலவுக்குதவுமா?
Will the money seen in a dream be available for one's expenses?

---

464. கறந்தபால் முலையிற்போமோ?
Will the milk return into the udder?

---

465. கண்குருடானாலும் நித்திரையிலே தாழ்வா?
Though the eye be blind is the sleep thereby affected?

---

466. கடிகோலிலே கட்டின நாய்.
A dog tied to a stick.

---

467. கனிந்தபழந் தானேவிழும்.
The ripe fruit falls of itself.

---

468. கறடியனார் பிறைக்கண்டது போல.
As the bear looked at the new moon.

---

469. கட்டாந்தரை அட்டையைப்போல.
Like a leach in dry ground.

---

470. கல்வியென்ற பயிருக்குக் கண்ணீரென்ற மழை வேண்டும்.

Plants of learning must be watered with the rain of tears.

---

471. கண்ணையிமை காத்ததுபோல.

As the eye-lashes preserve the eye.

---

472. கடலின் மீனுக்கு நுழையனிட்டது பேர்.

The names of the fish of the sea are given by the fisherman.

---

473. கழுதையைக் கட்டி ஓமம்வளர்த்தாற் போல.

Like tying an ass and performing sacrifice.

---

474. கட்டிவைத்த பூனையையவிழ்த்துவிட்டு வாவுசு வாவுசு வென்றால் வருமா?

At the call of puss, puss, will the cat just loosed from its bondage return?

---

475. களவுங் கற்றுமற.

Learn even to thieve but forget it.

---

476. கழுவிக்கழுவிச் சேற்றிலே மிதிக்கிறதா?

Is it alternately to wash and tread in the mud?

---

477. கள்ளனை நம்பினாலும் நம்பலாம் குள்ளனை நம்பப்படாது.

Though a rogue may be trusted, a dwarf may not.

---

478. கனமூடன் கைப்பொருளிழப்பான்.

The learned fool will lose his wealth,

---

479. கண்டது கேட்டது சொல்லாதே காட்டுமரத்திலே நில்லாதே.

Repeat not what you have seen and heard nor stand under a wild tree.

---

480. கண்டது பாம்பு கடித்தது கருக்குமட்டை.

What he saw was a snake, but that which bit him was the stem of a Palmira leaf.

---

481. கழுதைமேலேறினாற் சுகமில்லை.

It is not comfortable to ride on an ass,

---

482. கட்டிக்கொண்டு வாச்சொன்னால் வெட்டிக்கொண்டு வருகிறேனென்கிறான்.

If one says come binding, he replies, I will come cutting.

---

483. கல உமித் தின்றலோரவிழ்த் தட்டாதா?

When a bushel and a half of husks are eaten will not a grain of rice get between the teeth?

484. கடுக்காயிற் கனிநஞ்சு சுக்கிற் புறணி நஞ்சு.

The kernal of the gall-nut is poisonous, and the rind of ginger is poisonous.

---

485. கல்லைக்கண்டால் நாயைக்காணோம் நாயைக்கண்டாற் கல்லைக்காணோம்.

When a stone is seen we see no dog, and when a dog is seen, we see no stone.

---

486. கள்ளனச்சங் காடு கொள்ளவில்லை.

The fear of robbers is not confined to the desert.

---

487. கல்லையாகிலுங் கரைக்கலாம் மனதைக் கரைக்கப்படாது.

Though a stone, it may be dissolved, but the mind cannot be dissolved.

---

488. கற்றோரருமை கற்றோரறிவர்.

The erudite know how to estimate the learned.

---

489. கண்டது காட்சி பெற்றதுபேறு.

That which is seen is sight, and what is obtained is acquirement.

---

490. கடுகு சிறுத்துங் காரம்போகாது.

However small the seed of the mustard may be, its keenness is not thereby diminished.

491. கற்றது கையளவு கல்லாததுலகளவு.

The acquirements are a handful and the unattained wide as the world.

---

492. கல்லிலே நாருரிக்கிறது.

To peel a stone.

---

493. கனத்தவுடைமைக் கநத்தமில்லை.

Heavy articles are not perishable.

---

494. கரும்பு தின்னக் கைக்கூலியா?

Is a reward given for eating sugarcane?

---

495. கள்வன் பெண்சாதி கைம்பெண்சாதி.

The wife of the thief is a widow.

---

496. கப்பல் விட்டுக் கெட்டகுடி கொட்டைநூற்றாளாகுமா?

Will the family ruined by navigation grow rich by spinning cotton?

---

497. கறுப்பு வெளுப்பாகாது கசப்பினிப்பாகாது.

Black cannot be made white, nor bitterness sweet.

---

498. கமரிலே பாலூற்றுகிறது.

To pour milk into the cracks of the ground.

499. கழுதை குதிரையாகுமோ குதிரை கழுதையாகுமோ?
Will the ass become a horse or the horse an ass?

---

500. கனவெலி வளையெடாது.
Rats in large numbers do not make holes.

---

501. கண்ணியிலகப்பட்ட மான்போலக் கலங்குகிறன்.
He trembles like a deer caught in a snare.

---

502. கடையிலே கட்டித்தூக்கின அழுகற் பூசணிக்காய்.
A rotten pumpkin hung in the bazaar.

---

503. கனமழைபெய்தாலுங் கருங்கல்லுக்குளீரமேறாது.
Though the rain fall heavy, the damp will not penetrate granite.

---

504. கழுதை மயிர் பிடுங்கித் தேசம்.
The country where ass's hair is plucked.

---

505. கடையிலே கொண்டு மனையிலே வைக்கிறேன்.
I bought it in the bazaar, and place it in the house.

---

506 கம்பிளிமேற் பிசின்.
Gum on the blanket.

---

507. கற்பித்தவன் காப்பாற்றுவான்.

He who commanded, will preserve.

---

508. கருமத்தை முடிக்கிறவர் கடலையாராயார்.

Those intent on their object do not mind the depth of the sea.

---

509. கன்றுக்குட்டி கட்டச் சொன்னார்களோ கட்டுத்தறியைப் பிடுங்கச் சொன்னார்களோ!

Was the order to tie the calf or to remove the stake?

---

510. கடல்வற்றிக் கருவாடு தின்கலாமென் றுடல்வற்றிச் செத்ததுகொக்கு.

The crane hoping to eat dried fish when the sea might be dried up, wasted away in expectancy.

---

511. கறிக்குளக்கு நெய் வார்த்தாலுங் கண்ணிற் கண்டதைச்சொல்.

Though a gill of ghee be poured into the curry, yet say what you saw.

---

512. கண்டறியாதவன் பெண்டில் கொண்டாற் காடுமே டெல்லாங் கொண்டிழுப்பானும்.

It is said that if he who is ignorant of every thing he sees, marries a wife, he will drag her even to the woods and mountains.

513. கரும்பினிதென்று வேரோடே தின்கலாமா!
Because the sugarcane is sweet must one eat the roots along with it?

---

514. கள்ளமனந் துள்ளும்.
An evil mind is agitated.

---

515. கருங்காலியுலக்கைக்கு வெள்ளிப்பூண் போட்டதுபோல.
As a silver ferrule is put on the ebony pestle.

---

516. கழுதைக்குத் தெரியுமா கத்தூரிவாசம்!
Is the smell of musk known to the ass?

---

517. கடையிலரிசி கஞ்சிக்குதவுமோ அபசாரி புருஷன் ஆபத்துக்குதவுவானோ!
Is the rice in the bazaar available for Congee? Will the husband of the adulteress assist her in distress?

---

518. கடுகுபோனவிடமாராய்வர் மிளகுபோனவிடமாராயார்.
The lost mustard seed is sought, but the lost pepper is not inquired after.

---

519. கம்பளம் விற்றகாசு மயிர் முளைத்திருக்காது.
Hair will not grow on the coin for which the blanket was sold.

520. கழுதைக்குபதேசங் காதிலேசொன்னாலும்பையக் குரலன்றி வேறுகுரலில்லை.

Though one teaches an ass by speaking in his ears we obtain nothing but braying.

521. கண்ணாடிக்குள்ளாகத் தோன்றிய பணமுடிச்சுப் போல.

Like a bundle of money seen in a mirror.

522. கணக்கதிகாரமெல்லாம் பிளக்குங் கோடரியாயிருக்கிறான்.

He solves all problems as the axe splits the wood.

523. கடுஞ்செட்டுக் கண்ணைக் கெடுக்கும்.

Unfair dealing destroys the eye.

524. கரைப்பார் கரைத்தாற் கல்லுங்கரையும்.

When the efficient act, they will dissolve even a stone.

525. கண் கண்டது கைசெய்யும்.

What the eye has seen, the hand may do.

526. கள்ளனுந்தோட்டக்காரனுமொன்று.

The thief and the gardener are one.

527. கழுதைப் புண்ணுக்குப் புழுதி மருந்து.
Dust is medicine to the sores of an ass.

528. கத்தரிக்காயிலே காலுங்கையுமுளைத்தாற்போல.
As the foot and the hand sprang from the brinjal.

529. கழுதைவிட்டையானாலுங் கைநிரம்பவேண்டும்.
Though it be ass's dung get a handful.

530. கல்லைக்கிள்ளிக் கையிழந்தது போலாம்.
It is said to be like losing the hand on pinching a stone.

531. கனவிலுங் காக்கை பீதின்கிற நினைவு.
The thought of eating dung affects the crow even in its dreams.

532. கண்டிருந்து பீயைக் கவிழ்ந்திருந்து தின்கிறதா?
Seeing that it is ordure is it to eat it hanging down the head?

533. கள்ளிக்கு வெட்டிக் கற்றாழைக்கு வெட்டுகிறது.
Cutting kalle and then cutting kattala.

534. கவணெறி நிலைநில்லாது கண்டவன்றலையுடைக்கும்.
The stone thrown from a sling will miss its mark, and break some one's head.

535. கம்பிளியிலே சோற்றைப் போட்டு மயிரென்றாற் போமா?

When rice is put on the hair cloth, will the hair disappear by merely saying it is there?

---

536. கரும்புக்கட்டாலே கழுதைக்கடித்தாற் கழுதையறியுமோ கரும்புருசி?

If the ass be beaten with a bundle of sugar-cane will he thereby taste its sweetness?

---

537. கரும்பு கட்டோடேயிருக்கவெறும்பு தானேவரும்.

Ants will come of themselves where bundles of sugar-cane are placed.

---

538. கண்டபாவனையிலே கொண்டைமுடிக்கிறது.

To tie up the hair according to the fashion.

---

539. கல்லுவருகிற விசையைக் கண்டாற் பல்லைச்சிக் கெனமூடவேண்டும்.

When you see the force of the approaching stone, close and cover your teeth.

---

540. கதவுசாத்தினால் நிலைபிறத்தி.

When the door is shut, the door-post is outside.

---

541. கயிற்றைப் பாம்பென்றெண்ணிக் கலங்குகிறது.

To be alarmed at a rope imagining it a snake.

---

542. கதிரைக் களைந்துங் களையைப் பிடுங்கு.

Though the ears of corn are destroyed, pull up the weeds.

---

543. கள்ளனுக்குப் போகிறதெல்லாந் திருட்டுப்புத்தி.

The whole bent of the thief is to steal.

---

544. கண்டாற்றெரியாதோ கம்பிளியாட்டுமயிரை.

May not sheep's hair be known if seen?

---

545. கழுதைதேய்ந்து கட்டெறும்பாயிற்று.

The ass wearing away became an ant.

---

546. கம்மாலையினாய் சம்மட்டித்தொனிக்கஞ்சுமா?

Will the dog in the blacksmith's shop fear the sound of a hammer?

---

547. கண்ணாலே கண்டதற் ககப்பைக்குறியேன்?

Of what use is the mark of the spoon, when the eye has seen the thing itself?

---

548. கத்தியிருக்கு மிடத்துக்கு மரைகாவுகிறதா?

Is the elk to be borne to the place where the knife is?

---

549. கருங்கண்ணிபட்டாற் கரையான் கண்ணாலுந் திரும்பிப் பாரான்.

When the fisherman has caught a karong kanne he will not turn his eyes back.

550. கண்ணுக்குட் சம்மாணங் கோட்டுவாள் கம்பத்திலைந்தானை கட்டுவாள்.

She will sit composedly in the eye, and tie five elephants to the gymnastic pole.

551. கலியாணவீடு கண்டதுமில்லைக் கோட்டுச்சத்தங் கேட்டதுமில்லை.

No wedding house is seen, nor is the sound of the drum heard.

552. கரும்பு வேம்பாச்சே.

The sugar-cane has become a margosa-tree.

553. கண்ணாலேசீவன் கடகடென்றுபோனாலும் வண்ணானுக்கு மழைநஞ்சு.

Although the soul of the washer-man should suddenly leave him through his eye, rain would be to him poison.

554. கலகமே மெய்யானாற் புழுகாதவன் பாவம்.

If it be true that the quarrel took place he who does not make it known is faulty.

555. கங்கையிலே படிந்தாலும் பேய்ச்சுரைக்காய் நல்லசுரைக்காயாகாது.

Though an inferior gourd be washed in the Ganges it will not become good.

---

556. கண்ணிலெண்ணெய் கரிக்கும், பிடரியிலெண்ணெய் கரிக்குமா?

The oil put in the eye will give pain, will it do so, if put on the back of the neck?

---

557. கண்ணான பேர்களைப் புண்ணாக்கினாய்.

Thou hast afflicted friends dear as the eye.

---

558. கடற்கரையிற்றாழங்காய் கீழ்த்தூங்கியென்ன மேற்றூங்கியென்ன?

What matters it whether the wild pine fruit on the sea-shore hang up or down?

---

559. கலத்திலே சோற்றைப் போட்டுக் கையைப்பிடிக்கிறது போல.

As one seizes the hand of his guest after having put rice for him on the plate.

---

560. கலியாணவீட்டிலே பந்தற்காலைக் கட்டிக்கொண்டழுகிறவன் செத்தவீட்டிலே சும்மாவிருப்பானோ?

Will he who embraces the post of the marriage canopy and weeps, forbear to weep at funeral obsequies?

---

561. கடல்பெருகி மேலிட்டாற் கரையேது?
Of what use is the shore when overflowed by the sea?

562. கள்ளனுமாகி விளக்கும் பிடிக்கிறாய்?
Thou thyself the thief bearest the lamp.

563. கடலிலே பெருங்காயங் கரைத்தாற் போல.
Like asafetida dissolved in the ocean.

564. கண்ணைக்கொண்டு நடப்பதுபோல உன்னைக்கொண்டு நடந்தேன்.
I walked by thy aid as well as with my own eyes.

565. கரும்பிற்குழுதபுழுதி காச்சியபாலுக்குச் சருக்கரையாகுமா?
Will the dust of the ground ploughed for sugar, become sugar in the boiling milk?

566. கடாமேய்க்கப் போனவனறிவானோ கொழுவிழுந்தது.
Will the goatherd know that the ploughshare has fallen?

567. கடாப்பின் வாங்குகிறது பாச்சலுக்கடையாளம்.
The retrocession of the goat is the sign of attack.

568. கரைகாணாத தோணிபோலே.
Like a dhoney out of sight of the shore.

---

569. கண்ணிலே வருகிறது புருவத்திலே.
Missing the eye, it hit the eye-brow.

---

570. கம்புக்குக் களைவெட்டினாற் போலத் தம்பிக்குப் பெண்கேட்டாற்போல.
As a weed among the small grain is cut, and as a wife was solicited for the younger brother.

---

571. கடலிலே துரும்புகிடந்தாலுங் கிடக்கும் மனதிலே கிடவாது.
The rush may rest in the ocean if put there, but not in the mind.

---

572. கம்பத்திலேறிக் கரணம்போட்டாலுங் கீழேயிறங்கிக் கையேற்கவேண்டும்.
Though one ascend a pole to make a summerset, he must descend to obtain his reward.

---

573. கள்ளிக்குக் கண்ணீர் கண்ணிலே நீலிக்குக் கண்ணீரிமையிலே.
The tears of the cruel and abandoned woman are in her lashes; those of the less vicious are in her eyes.

---

574. கதைக்குக் காலுமில்லைத் தலையுமில்லை.
There is neither head nor foot to mere talk.

---

575. காட்டுச் சுரைக்காய் கறிக்காமா!
Is the wild gourd fit for curry?

---

576. கார்த்திகைக்குப் பின்பு மழையுமில்லைக் கன்னனுக்குப் பின்பு கொடையுமில்லை.
There is no rain like that of November, and no gift equal to those of Cannan.

---

577. காரியத்திலே கண்ணல்லாமல் வீரியத்திலேயில்லை.
His eye is intent on the matter, not on it's attendant applause.

---

578. காலாலே நடந்தாற் காதவழி தலையாலே நடந்தாலெவ்வளவு தூரம்?
If the distance be ten miles on foot how much will it be if one walk on his head?

---

579. காசுக்கொரு சீலை விற்றாலும் நாயின் குண்டி நிருவாணம்.
Though a cloth is sold for a mere tithe, yet the posteriors of the dog will be bare.

---

580. காவடிப்பாரஞ் சுமக்கிறவனுக்குத் தெரியும்.
He who bears the burden on his shoulders, knows its weight.

---

581. காவோலை விழுந்ததென்று குருத்தோலை சிரித்ததாம்.
It is said that the young leaves of the palmira laughed because the dried leaves fell off.

---

582. காய்ந்த மரந் தளிர்க்குமா?

Will a dry tree bud?

583. காகங் கொக்குக் கனகிளியனுமான்.

The crow is a crane, the flight of parrots is a monkey.

584. காற்றைப்பிடித்துக் கரகத்திலடைத்ததுபோல.

Like the wind caught and confined in a kettle.

585. காராம்பசுவுக்குப் புல்லுமாம் நந்தாவனத்துக்குக் களையுமாம்.

The flower garden is weeded, and fodder is procured for the black cow.

586. காணிசோம்பல் கோடிநட்டம்.

Indolence if only an eightieth part produces a crore of disadvantages.

587. காரிகையற்றுக் கவிசொல்லுவதிற் பேரிகைகொட்டிப் பிழைப்பது நன்று.

It is better to beat a tom-tom for a livelihood than to compose poetry without the knowledge of prosody.

588. காலத்திற்பெய்த மழைபோலாம்.

Like rain in due season.

589. காற்றுக்குத் தோணியெதிர்த்தோடாது.
A dhony will not sail against the wind.

590. காய்த்தமரங் கல்லெறியப்படும்.
The fruitful tree is pelted with stones.

591. காசைக்கொடுத்துக் குத்துமாடு தேடுகிறதா?
Is it proper to give a price for a goading ox?

592. காசிக்குப்போயுமுடத்தவசி காலிலே விழுகிறதா?
After having visited Benares ourselves, shall we fall at the feet of a lame ascetic?

593. காற்காசுப்பூனை முக்காற்காசுத் தயிரைத்தின்றதாம்.
It is said that the Cat that was worth a quarter of a cash, has eaten curds worth three quarters of a cash.

594. காளிகோட்டத்துக் கற்பக விருட்சமாருக்குமுதவாது.
The sacred tree Catpagam would avail nothing if in the temple of Kali.

595. காவிரியாற்றை மறிப்பாய் கார்த்திகை மாதத்துக் கற்கடக சந்திரனையும் மறிப்பாயா?
You may prevent the streams of the river Caverry from flowing on our lands but have no power to hinder the effect of the November moon in the Constellation Cancer.

596. காணிக்கொத்தது கோடிக்கு.

That which pertains to an eightieth part pertains to a crore.

597. காப்பானுக்குக் கள்ளனில்லை.

The vigilant are free from thieves.

598. காலம்போம் வார்த்தைநிற்கும்.

Time passes away but sayings remain.

599. காய்ந்தபுலி ஆளிலேவிழுகிறது போல.

As a hungry tiger pounces on a man.

600. காய்ந்தாலும் வெந்நீரவம் போமோ!

Though it be boiled, will water become useless?

601. காடுவாவென வீடுபோவென.

The burning place says come and the house says go.

602. காகமில்லாதவூர் சோனகனில்லாதவூர்.

The country that has no crows has no mussulmans.

603. காகமிருக்கப் பழம்விழுந்ததுபோல.

As the fruit fell just at the time the crow was there.

604. காலத்துக்குத்தக்க கோலம்.

The usage is as the time.

---

605. காலைச்சுற்றிய பாம்பு கடித்தாலன்றி விடாது.

A snake that has entwined itself about the leg will not leave without biting.

---

606. காட்டுப்பூனைக்குச் சிவராத்திரியா?

Does the wild cat observe Siva's night?

---

607. காட்டில் யானையைக்காட்டி வீட்டிற் பெண்ணைக் கொடுக்கிறது.

To show an elephant in the forest, and present the bride at home.

---

608. காதவழி பேரில்லான் கழுதை.

He who has no reputation within ten miles is an ass.

---

609. காடையும் புழுதியும்போல.

Like a quail and dust.

---

610. காட்டுக்கெறித்த நிலாக் கானலுக்கே பெய்தமழை.

Moon-light in the desert, and rain in the wilds.

---

611. காற்றுள்ளபோதே தூற்று கரும்புள்ளபோதே ஆட்டு.

Winnow while there is wind, and turn the mill while there is sugar-cane.

---

612. கார்த்திகைப் பிறைப்போலக் கண்டேன்.

I saw it as the phase of a November moon.

---

613. காமாறிக்கட்டினாற் கனங்குறையுமா?

By changing the load suspended on a bearing pole, will the weight be lessened?

---

614. காடுவேந்தாற் சந்தனமரம் வேகாதோ?

If the forest be consumed will the sandal wood be unburnt?

---

615. காரியக்காரன் கொல்லையிலே கழுதைமேய்ந்தது.

The ass feeds in the ground of the industrious.

---

616. காரியம்பெரிதோ வீரியம்பெரிதோ?

Which is greater the matter in hand, or the applause connected with it?

---

617. காதுகாதென்றாற் செவிடுசெவிடென்கிறான்.

If one says it is an ear, an ear, it is replied deaf, deaf.

---

618. காகமேறிப் பனங்காயுதிருமா?

Will the palmira fruit fall because a crow alights on the tree?

---

619. காணப்பட்டதெல்லாமழியப்பட்டது.

All that is visible is mutable.

---

620. காசில்லாதவனுக்கு வராகன்பேச்சென்ன?

Of what use is it to talk of golden coins when one has no money?

---

621. காதுக்குக் கடுக்கனிட்டால் முகத்துக்கழகு.

Ear-rings add to the beauty of the countenance.

---

622. காற்றைப்பார்த்து எச்சில்துப்பினால் முகத்திலேவிழும்.

If one spit against the wind, the spittle will fall in his face.

---

623. காதிலே நாராசமேற்றினாற்போல.

Like putting a heated rod in the ear.

---

624. காரியத்துக்குக் கழுதையின் காலைப்பிடி.

Lay hold of the ass's foot to aid your purpose.

---

625. காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்றுவந்தவன் கொண்டுபோனான்.

He who came yesterday has carried off the wife upon whom one had long bestowed his attention,

---

626. காட்டிக்கொடுத்துக் கடக்கட்போய் நிற்கலாமா?

Having led the way, is it right to abandon the project?

---

627. கிணறும் வெட்டித் தவளையும் பிடித்துவிடுகிறதா?

Is it necessary for one to provide frogs for the well he has dug?

---

628. கிணறுவெட்டித் தாகந்தீருமா?

Is thirst to be quenched by digging a well?

---

629. கிண்டக்கிண்டக் கிரையுமயிரும்.

By continued digging nothing but wild herbs and hair is obtained.

---

630. கிழவிவரவுஞ் சுவரிடியவும்.

An old woman approaches and the wall falls,

---

631. கிணறுமேந்திறற் கீழ்வரைபோசியும்.

If the well be full it will fructify its vicinity.

---

632. கிழவியுங்காதங் குதிரையுங்காதம்.

The *Katham of the old woman is as the Katham of the horse.

---

633. கிட்டாதொன்றை வெட்டெனமற.

Sever from your thoughts the thing which cannot be obtained as the thing cut is severed.

---

634. கிணறு இறைக்கவிறைக்க ஊறும்.

The more the well is drawn the better will be the spring.

---

635. கிளியைவளர்த்துப் பூனையிடத்துக்குத் தூதுக்கனுப்புகிறதா?

Is a trained parrot sent to convey a message to the cat?

---

636. கிணறுதப்பித் துரவில் விழுந்ததா?

Having escaped the well, has he fallen into the ditch?

---

637. கிணற்றைக்கண்டு கடலொதுங்கிப் போனதுபோல.

As the sea on seeing the well shrunk back.

---

637. கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன்?

Of what use can the news of the country be to a frog in a well?

---

*A Katham is three hours walk or about 10 miles.

638. கிழிந்தபம்பரங் காசுக்கிரண்டு.

Two split tops for a cash.

---

639. கிடக்கிறதோட்டுத்திண்ணை கனுக்காண்கிறது மச்சுமாளிகை.

A palace seen in the dream of one lying on a round pyal.

---

640. கிழவியிருந்தவீடுங் கிளியிருந்த காடுமீடேறமாட்டாது.

The house of an old woman, and the place frequented by parrots are beyond redemption.

---

641. கிணற்றாழமுங் கயிற்றுநீளமும் பார்க்கவேண்டும்.

The depth of the well and the length of the rope must be ascertained.

---

642. கிழக்குவெளுத்து முக்காடா?

What! a vail now the east is becoming white!

---

643. கீரைத்தண்டுபிடுங்க ஏலப்பாட்டேன்?

Why a song of acclamation when pulling up the stem of an herb?

---

644. கீரைக்கடைக்குமெதிர்க்கடை வேண்டும்.

An opposition stall is necessary even among green grocers.

---

645. கீழ்குலத்தானானாலுங் கற்றவன் மேற்குலத்தான்.

Though of lowly origin the learned is of distinguished rank.

---

646, கீழேபாம்பென்றால் மேலேபார்க்கிறான்,

When it is said there is a snake below, he looks above,

---

647. கீறியாற்றினாற் புண்ணாறும்.

When probed, the wound will heal,

---

648, கீரியும் பாம்பும்போல,

As the ichneumon and snake,

---

649. குரங்கிற்குந் தன்குட்டி பொன்குட்டி.

Even the monkey thinks its own young precious as gold.

---

650, குட்டிச்சுவரிலே தேள்கொட்டக் கட்டுத்தறியிலே நெறியிடுமா!

Will the scorpion sting the wall, or will a swelling rise on the tether stake?

---

651. குறத்திபிள்ளைப்பெறக் குறவன்காயங்குடிக்கிறது.

The forestress brings forth the child, and the forester drinks the medicine,

---

652. துணிப்பால் கறந்தபோதிலுங் கூரைபிடுங்கப் பார்த்திருக்கலாமா!

Though it yield a gallon of milk, shall the cow be permitted to destroy the roof?

---

653. குயவனுக்குப்பலநாள்வேலை தடியடிகாரனுக்கொருநாள்வேலை.

Many days work to the potter, only one to the destroyer.

---

654. குட்டிச்சுவரைமுட்ட வெள்ளெழுத்தா!

So dim-sighted as to run against a dwarf wall!

---

655. குலைக்கிறநாய்க்குக் கோலைக்கொடுத்தால் ஊரெங்குங்கொண்டோடிக் குலைக்கும்.

If the staff be put into the mouth of the barking dog it will run barking with it all over the country.

---

656. குளவிக்கூட்டைக் கோலாற்குலைத்தாற் போல.

Like destroying a bee-hive with a stick.

---

657. குரங்கின்பீயை மருந்துக்குக்கேட்டால் உயரவுயரப் பாயுமாம்.

It is said that if the monkey be requested to give his dung for medicine he will climb higher and higher.

---

658. குடிபோனவீட்டிலே பெருச்சாளியுலாவும்.
The rat will promenade the empty house.

---

659. குளங்காக்கிறவன் தண்ணீரைக்குடியானோ?
Will not the porter of the tank drink its water?

---

660. குருட்டுப்பூனை விட்டத்திற் பாய்ந்ததுபோல.
As the blind cat leaped at the beam.

---

661. குங்குமஞ்சுமந்த கழுதை வாசனையறியுமா?
Does the ass that carries red ocher know its scent?

---

662. குதிக்கிறேமென்பவர்களெல்லாங் கூடத்தீயிற்குதிப்பார்களோ?
Do all who profess the intention leap into the fire along with the dead?

---

663. குடித்தனமேலிட வேண்டிப் பிடாரிதனைப்பெண்டு வைத்துக்கொள்ளுகிறது போல.
To take to wife the goddess Pedary that the family may prosper.

---

664. குடத்திற்பொன் கூத்தாடுமோ?
Will gold dance in a pot?

---

665. குருடன் கையிலே விலாங்ககப்பட்டது போல.
As an eel caught in the hand of the blind.

666. குழப்படி கண்டு திரைக்கடலேங்குமா?
Will the sea be dismayed at an uproar?

---

667. குள்ளப்பார்ப்பான் குழியில் விழுந்தான், தண்டெடு தடியெடு.
The dwarfish brahmin has fallen into the pit, bring a staff, bring a stick.

---

668. குட்டுப்பட்டால் மோதிரக் கையினாலே குட்டுப்பட வேண்டும்.
If boxed at all it should be with the hand that is adorned with rings.

---

669. குற்றமுள்ளநெஞ்சு குறுகுறுக்கும்.
A guilty breast is always agitated.

---

670. குழந்தை கத்துகிறதெல்லாம்மமையாருக்கிலாபம்.
The crying of the child is advantageous to the mother.

---

671. குட்டியாடு கொழுத்தாலும் வழுவழுப்புப்போகாது.
Though the young kid become fat its flesh will not become solid.

---

672. குறையச்சொல்லி நிறையவளா.
Saying little, give full measure.

---

673. குடியிருந்தறி வழிநடந்தறி.
Know the place by residing in it, and the road by walking in it.

---

674. குப்புறவிழுந்து தவஞ்செய்தாலுங் குருக்களுக்கு மோட்சமில்லை.
Though they do penance falling prostrate on the face, priests will not attain final emancipation.

---

675. குளத்தைக் கலக்கிப் பருந்திற் கிரைகொடுக்கிறது போல.
It is like agitating the tank and exposing the fish as the prey of the kite.

---

676. குருடனுக்கு வேண்டியதுகண்.
All that the blind require is sight.

---

677. குருடனுக்குக் குருடன்கோல்பிடிக்கலாமா?
Can the blind lead the blind?

---

678. குழந்தாய் குழியிலமிழ்ந்தாதே.
My child do not fall into the pit.

---

679. குடிமதமடிபடத் தீரும்.
Beating will cure drunkenness.

680. குடிக்கிறது கூழ் கொப்பளிக்கிறது பன்னீர்.

Drinking gruel and washing the mouth with rose water.

681. குணம் மாற்றக் குருவில்லை.

There is no priest who can change the natural disposition.

682. குத்துகிற உரல் பஞ்சமறியுமா?

Will the rice pounder be affected by the famine?

683. குண்டிகாய்ந்தாற் குதிரையும் வைக்கோல் தின்னும்.

A hungry horse will cat straw.

684. குருடனுக்குப் பால் கொக்குப்போல.

As milk was like a paddy bird to the blind man.

685. குருக்கள் பிழைத்தது மறுபிறப்பு.

That the Priests lived is as a new birth.

686. குபேரன்பட்டினங் கொள்ளைபோனாலும் அதிட்டவீனனுக்குத் துடைப்பக்கட்டையுமகப்படாது.

Though the city of Kuparan be taken as a spoil, the unfortunate will not obtain even a broomstick.

687. துளைபிடுங்கின காது துளுதுளுக்கும்.

The ear that is stopped tingles.

---

688. குதிரை குருடானாலுங் கொள்ளுத் தின்கிறதிற் குறைச்சலில்லை.

Though blind, the horse does not thereby eat the less.

---

689. குவளைக்கண்ணுக்கு நாழிமையிட்டாலுங் குருடேறுதலைக் கண்ணுகாது.

Though four measures of collyrium be applied to the eye that is dim, it will not be improved.

---

690. குடிக்கிறது கூழாம் இருக்கிறது சிங்காதனமாம்.

Drinking gruel it is said and sitting in the place of royalty.

---

691. குலைக்கிற நாய் வேட்டைபிடிக்குமா?

Will the barking dog catch game?

---

692. குயவா கலசங்கொண்டுவாடா இடையா பால்கொண்டுவாவென்றதுபோல.

It is like saying to the potter bring me a pot, and to the cowherd bring me some milk.

---

693. குருடன் பெண்டிலுக்கடித்ததுபோல்.

As the blind man beat his wife.

694. குப்பையுயர்ந்தென்ன கோபுரந்தாழ்ந்தென்ன!
What avails height in the dung-hill? Is the town disparaged by being low?

---

695. குட்டிநாய்கொண்டு வேட்டையாடினதுபோல.
Like one who went to hunt with a whelp.

---

696. குளிக்கப்போய்ச் சேறுபட்டுக்கொண்டது.
Having gone to bathe, to smear mud.

---

697. குடலுங் கூந்தலுங் கொண்டதுகோலம்.
The bowels and the hair are under the power of habit.

---

698. குரங்கெல்லாமொருமுகம்.
All monkeys have faces alike.

---

699. குருடனைப்பார்த்திராசமுழி முழிக்கச்சொன்னாலு முழிப்பானோ!
If the blind man be requested to imitate the gaze of the king, can he do it?

---

700. குருவிக்குத்தக்கராமசரம்.
The arrow of Rama will be suited to the bird.

---

701. குடத்திலே விளக்கு.
A lamp in a pitcher.

716. கும்பிடப்போனதெய்வங் குறுக்கேவந்தது.

The god I went to worship has come to me by a cross cut.

717. கும்பிடப்போனவர் தலையிலே கோயிலிடிந்து விழுந்தது.

The temple has fallen on the head of him that went to worship.

718. குளத்திற்போட்டுக் கிணற்றிற்றேடலாமா?

Having put it into the tank is it to be sought in the well?

719. குண்டியறுத்த பருந்துபோல.

As a kite with its tail cut off.

720. குருவியின்கழுத்திலே பனங்காயைக் கட்டித்தூக்கலாமா?

Can palmira fruit be suspended from the neck of a little bird?

721. குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை.

When faults are scrutinized, relationships cease.

722. குடிக்கிறதெருமைமூத்திரங் கடித்துக்கொள்ளுகிறதிஞ்சிப்பச்சடி.

He drinks the urine of the buffaloe and eats conserves of ginger.

723. குறைகுடந்தளும்பும் நிறைகுடந்தளும்பாது.

It is not the full pot that ripples, but the one partly filled.

---

724. குரங்கேறாத கொம்புண்டா?

Is there a branch the monkey has not climbed?

---

725. குருவில்லாத வித்தையுண்டா?

Is there any science except that received from instructors?

---

726. குளம்வெட்டுமுன்னே முதலை குடியிருக்கவருமா?

Before the tank is dug, will the alligator come and take up his abode in it?

---

727. குதிரைசெத்ததுமல்லாமற் சேணஞ்சுமக்க வேலையாயிற்று.

Besides the loss of the horse by death, the labour of carrying the saddle is incurred.

---

728. குடியில்லாதவூருக்கு நரியிராசன்.

The jackal is monarch of the uninhabited country.

---

729. குதிரையேறவதிட்டமிருந்தாற் குண்டிக்கீழ்வந்து நுழையாதா?

If one has the good fortune to ride on horseback, will not the horse find its way between his legs?

730. குடந் தண்ணீரிற் கொள்ளிவைத்தாற்போல.

As a fire-brand was put into the water pot.

---

731. குருடன்கைக் கோலைப்பிடுங்கினதுபோல.

As the blind man took hold of a stick borne by another.

---

732. குடலறுந்த நரி எத்தமட்டுமோடும்?

How far will the jackal run whose bowels are gushing out?

---

733. கூடக்குடியிருந்துபோட்டுக் கொள்ளி செருகலாமா?

After having lived on terms of intimacy with me, are you come to strew fire-brands in my house?

---

734. கூலிக்குநாற்றுநடவந்தெல்லைக்குவழக்கோ?

Having come to plant for hire is it for you to dispute about the boundary of the land?

---

735. கூத்தாட்டுச் சிலம்பம்படைவெட்டுக்காகுமா?

Will the mimickry of the theatre avail in the battle field?

---

736. கூழுக்கு மாங்காய் தோற்குமா?

Will unripe mangoes lose their property in gruel?

737. கூழுக்குமாசை மீசைக்குமாசை.

Desire for mustaches and desire for gruel.

---

738. கூரையேறிக்கோழிபிடியாத குருவா வானத்தைக் கீறி வைகுந்தங் காட்டுவான்.

Can the Teacher who is unable to climb the roof to catch a fowl, open the heavens and show Vaicundam? (the paradise of Vishnu.)

---

739. கூத்தாடிக்குக் கீழேகண் கூலிக்காரனுக்கு மேலே கண்.

The eye of the dancer is downward and that of the labourer upwards.

---

740. கூகை விழித்தாற் போல விழிக்கிறான்.

He stares like an owl.

---

741. கூரைமேலே சோறுபோட்டாலாயிரங்காகம்வரும்.

If boiled rice be put on the roof, a thousand crows will come.

---

742. கூழென்றாலுங் குடித்தவன் பிழைப்பான்.

Though it be but gruel he who drinks it may live.

---

743. கூழென்றாலுங் குளித்துக் குடி.

Though it be only gruel wash before you drink.

---

744. கூட்டத்திற் கட்டுச்சோறவிழ்த்தது போல.

As a bundle of boiled rice was opened in a company.

745. கூனி வாயாற் கெட்டாற்போல.

As the crippled woman was destroyed by her mouth.

---

746. கெட்டகுடிக்கோர் கேட்டைபிறந்தது.

Born under the auspicious star Kattar of low family.

---

747. கெட்டவன் குடிகெட்டுநீ குடிமிளகு சாற்றை.

Let the worthless perish, you drink pepper water.

---

748. கெட்டாலுஞ் செட்டி கிழிந்தாலும் பட்டு.

Though ruined the merchant is a merchant; and silk though torn is silk still.

---

749. கெட்டமாடு தேடுமுன்னே யெட்டுமாடு தேடலாம்.

It is easier to procure eight oxen than to find one that has strayed.

---

750. கேடுவாய் கேடுநினையாதே தானே வருங்கேடு.

O evil one! do not devise evil, it will come of itself.

---

751. கெட்டிக்காரன் பொட்டெட்டுநாளளவும்.

Though expert in assuming the air of the rich, it will last only eight days.

---

752. கெட்டும் பட்டணஞ்சேர்.

Though you perish remain in town.

753. கெட்டுப்போன பாப்பானுக்குச் செத்துப்போன ப
சுவைத் தானங்கொடுத்தது போல.

As a dead cow is given to a poor Brahmin.

---

754. கெங்கையாடிப் பாவந்தீருமா?

Will sin be expiated by bathing in the Ganges?

---

755. கேள்விச்செவியன் ஊரைக்கெடுத்தான்.

He who listened to reports destroyed the country.

---

756. கேட்பார் புத்தி கேட்டுக் கெடாதே.

Do not ruin thyself by receiving the counsel of hearsay reporters.

---

757. கேடுவருமுன்னே மதிகெட்டுவரும்.

Infatuation precedes destruction.

---

758. கையிற் புண்ணுக்குக் கண்ணாடிவேண்டுமோ?

Is a looking-glass necessary to look at a sore on the hand.

---

759. கைப்பழத்தைக் கொடுத்துமரத்தின் பழத்துக்குக் கண்
ணூந்து நிற்பானேன்?

Why give the fruit in your hand and stand gazing at the fruit on the tree?

---

760. கையாற்கிழிக்கும் பனங்கிழங்கிற்கு ஆப்பும் வல்லி
ட்டுக் குத்தியுமேன்?

Why use a mallet and wedge for splitting the

newly germinated root of the palmira that may be split by the hand.

---

761. கையிலுமில்லைச் செட்டியார் பையிலுமில்லை.

Nothing in hand nor in the bag of the merchant.

---

762. கைதப்பிக் கண்ணிலேபட்டாற் கைவிரலைத் தறித்துப்போடுவார்களோ?

If the hand accidentally strike the eye, will the finger on that account be amputated?

---

763. கையைப்பார் முகத்தைப்பாரென்றிருந்தாற் காரியமாகுமோ?

Will the thing be effected by exclaiming—look at the hand! look at the face!.

---

764. கைதப்பினாற் கரணம்.

If the hand be withdrawn confusion ensues.

---

765. கையூன்றிக் கரணம்போடவேண்டும்.

A somerset must be made by resting on the hand.

---

766. கைக்கெட்டினது வாய்க்கெட்டாமற் போயிற்று.

The mouth did not get what the hand reached.

---

767. கையிலில்லாதவன் கள்ளன்.

He who is destitute is a rogue.

768. கையிலரிசியுங் கமண்டலத்திற் றண்ணீரும்.

Rice in the hand and water in the pitcher.

---

769. கையிற் பிள்ளையோடு கடலில் விழுந்தேன்.

I fell into the sea with the child in my hand.

---

770. கையிற் கிடைத்தவமுதைக் கமரிலூற்றலாமா?

Shall the nector obtained be poured out into the cracked ground.

---

771. கையினெல்லிக்கனி.

Like Nelli fruit in the hand.

---

772. கையிலேபடுக்குமளவுங் கோழி மோசமென்றறியாது.

The fowl is not aware of danger till seized by the hand.

---

773. கைம்பெண்சாதி பிள்ளையானாலுஞ் செய்யுஞ் சடங்கு செய்யவேண்டும்.

The ceremonies must be performed even for a widow's son.

---

774. கையிற் காசு வாயிற்றோசையாமா?

Is money in the hand food in the mouth?

---

775. கொடுங்கோன் மன்னவனாட்டிற் கடும்புலி வாழுங் காடுநன்று.

It were preferable to dwell in the desert with ravenous tigers than under a despotic ruler.

776. கொடுத்தவனைப் புகழ் கொடாதவனையிகழ்.

Praise him who gives, and reproach the one who withholds.

---

777. கோட்டுநெல்லுங் குறையாமல் மக்கள்வயிறும் வாடாமல்.

That the heap of rice may not decrease, nor the bellies of the children become small.

---

778. கொக்குத்திரளிலே கூளசாரி பாய்ந்தாற்போல.

As the vulture pounced on the assembled herons.

---

779. கொழுக்கட்டைக்குத் தலையுமில்லைக் குறவனுக்கு முறையுமில்லை.

No head to the pancake nor any rules of consanguinity amongst barbarians.

---

780. கொடுக்காத விடையன் சினையாட்டைக் காட்டினதுபோல.

As the shepherd pointed at the sheep with young that he intended not to give.

---

781. கொசுகிலே பிளவை அதிலே நீரழிவு அறுக்கிறதெங்கே அட்டையிடுகிறதெங்கே?

The eye-fly has got both the canker and diabetes, where shall the incision be made and where shall the leeches be put?

---

782. கொடிக்குச் சுரைக்காய் கனத்துப்போமோ?

Will the gourd become too heavy for the stem?

783. கொல்லத்தெருவில் ஊசி விலைப்போமோ?

Can spikes be sold in the Smith's Street?

784. கொல்லையிற் குற்றியையடைந்த புல்லு உழவுநுகப் பட்டுக் கெடுமோ?

Will the plough destroy the blade of grass at the foot of a block of wood in the garden?

785. கொட்டினாற்றேள் கொட்டாதிருந்தாற் பிள்ளைப்பூச்சியா?

If it bite it is a scorpion, if not, is it a harmless reptile?

786. கொசுகைப்பொருட்டாயெண்ணிக் கருடன்மோதினாற்போல.

As the kite encountered the eye-fly thinking it important.

787. கொடுத்ததைக் கொடுக்குங் குட்டிச்சாத்தி.

Cuttisatte (a demon) will give that which has been given him.

788. கொடுத்தவருக்கெல்லாமுண்டு, கொடாதவருக்கொன்றுமில்லை.

They who give have all things, those who withhold have nothing.

789. கொண்டு குலம் பேசலாகாது.

It is wrong to speak against the family one has espoused.

790. கொள்ளைக்குப் போனாலுங் கூட்டங்கூடாது.

Though going to plunder a large company is not good.

791. கொசுகே கொசுகே தலைமுழுகு நான் மாட்டேன் சனிக்கிழமை.

O eye-fly, eye-fly! bathe thy head. I cannot; it is saturday.

792. கொடிசுற்றிப் பிறந்தபிள்ளை குலத்துக்காகாதாம்.

For a child to be born involved in the after-birth is not good for the family.

793. கொசுகுமூத்திரங் குறுணிவேண்டுமென்றாற்போல.

Like requiring a gallon of eye-fly urine.

794. கொக்குக்குத் தெரியுமா கோழிக்குஞ்சைக் கொண்டுபோக?

Does the heron know how to carry off a chicken?

795. கொக்கிலிளங்குஞ்சுங் கோணதெங்குங் கண்டதில்லை.

The young of the heron has not been seen nor a strait cocoanut tree.

796. கொடாதவன் கூத்தைப்பழித்த சம்பந்தம்.

Kindred to the dislike expressed for comedies by him who did not like to give any thing.

797. கொல்லைபாழானாலுங் குருவிக்குப் பஞ்சமா?
Although the garden be destroyed, will birds become scarce?

---

798. கொல்லுகிறதுஞ் சோறு பிழைப்பிக்கிறதுஞ் சோறு.
Rice kills and rice preserves.

---

799. கோழிமுட்டையில் மயிர் பிடுங்குகிறது.
To pluck hair from a hen's egg.

---

800. கோபமில்லாத துரை சம்பளமில்லாத சேவகன்.
A master without anger and a servant without wages.

---

801. கோட்டைக்குள்ளே படைவெட்டா?
Is there a war within the fort?

---

802. கோடையிடி யிடித்தாற்போல.
As it thundered in summer.

---

803. கோயிலிற் பூனை தேவரை மதியாது.
The temple cat will not venerate the idol.

---

804. கோபம் பாவம்.
Anger is sin.

---

805. கோழியைக்கேட்டோ ஆணங்காய்ச்சுகிறது.
Is the permission of the fowl requested in order to make soup.

806. கோடரிக்காம்பு குலத்துக்கீனம்.

The handle of the axe is the enemy of its family.

---

807. கோழிதின்ற கள்ளனுங் கூடநின்றுலாவுகிறன்.

The thief who ate the fowl walks along with the owner.

---

808. கோழியடிக்கிறதற்குத்துறும்பொல்லுவேண்டுமோ?

Is a bludgeon necessary to beat a fowl?

---

809. கோளுஞ்சொல்லிக் கும்பிடுவானேன்?

Why does he who backbites, pay his respects to the one he injures?

---

810. கோழிக்கறியென்றதுங் கொண்டாடிக்கொண்டதுங் கீரைத்தண்டானதேடா சுப்பா கீரைத்தண்டானதேடா.

O Chuppa, the curry we lauded as very superior; and alas! it is only soup made of the stalks of herbs.

---

811. கோலிழந்த குருடன்.

The blind man who had lost his stick.

---

812. கோபமற்றாற் குரோதமறும்.

Cruelty will cease when anger is gone.

---

813. கோபமுள்ளவிடத்திலே பிரியமுண்டு.

There is love where there is anger.

814. கோழிக்களவுபோக ஆடுவெட்டிப் பொங்கலிடுவ தா?

Is it to sacrifice a sheep and made a feast on the occasion of a fowl being stolen?

---

815. கோழிபோனதுமல்லாமற் குரல்போன சம்பந்தம்.

Like losing one's voice by calling the fowl which we had lost.

---

816. கோழிமுடத்துக்குக் கடாவெட்டிப் பலியிட்டது போல.

Like offering a goat in sacrifice for the lameness of a fowl.

---

817. கோடியுமொருவெள்ளை குமரியுமொருபிள்ளை.

One washing to the new cloth and one child to the young woman.

---

818. கோழிகூப்பிட்டுவிடியுமோ நாய் கூப்பிட்டுவிடியுமோ?

Will the day break by the crowing of the cock or the barking of the dog?

---

819. கோழிமிதித்துக் குஞ்சுக்குச் சேதமுண்டா?

Is the chicken injured because the dam trod upon it?

---

820. சருக்கரைப்பந்தலிலே தேன்மாரி பெய்ததுபோல.

As a shower of honey on a shed of sugar.

821. சந்திரனைப்பார்த்து நாய் குலைத்தாற் சந்திரனுக்குச் சேதமுண்டோ?

If the dog bark at the moon will the moon be affected by it?

---

822. சயிக்கினையறியாதவன் சண்டாளன்.

He is a clown who cannot understand a hint.

---

823. சரக்குக்கண்டவிடத்திலே பிள்ளைப்பெறுகிறது.

To bring forth a child on seeing the preparations for the event.

---

824. சகலனுறவிற் சாண்கொடி பஞ்சமா!

Is not a span of rope to be had? It were preferable to the relationship of those who have married two sisters.

---

825. சமர்த்துள்ளசேவகனுக்கு வாள் பழுதானாலுங் கவ்வையில்லை.

Tho' the sword of the veteran be dull it is of no consequence.

---

826. சட்டிசுட்டதே கைவிட்டதே.

The pan burnt the hand and it dropped it.

---

827. சங்காயிரங்கொண்டு வங்காளம்போனாலுந் தன் பாவந் தன்னோடே.

Tho' one freight his vessel with a thousand chanks and sails to Bengal his own crimes will accompany him.

828. சருகரிக்கநேரமல்லாது குளிர்காய நேரமில்லை.

Time to gather dried leaves but none to warm himself.

---

829. சதகோடிசங்கத்திலே மோட்டைத்தாதனுக்கு வந்தது சாத்திரம்.

It is destined that it happen to a bald headed Brahmin in a company of a hundred crores.

---

830. சன்னாப்பன்வீட்டுக்கோழி தானே விலங்கிட்டுக் கொண்டதுபோல.

The fowl of Sannappan the weaver has fettered itself.

---

831. சந்நியாசி கோவணத்துக்கிச்சித்துச் சம்சாரம் மேலிட்டது.

Desiring a girdle the ascetic became a householder.

---

832. சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறன்.

The moon shines even in the house of the wicked.

---

833. சருக்கரைதின்று பித்தம்போனாற்கைப்புமருந்தேன் தின்னவேண்டும்?

If bile be removed by eating sugar why eat bitter medicine?

---

834. சமத்துக்குச் சனியன்.

Skill is opposed by saturn.

835. சண்டமாருதத்துக் கெதிர்ப்பட்டசருகு.

Dried leaves before a strong wind.

---

836. சதைகண்டு கத்திநாடவேண்டும்.

The knife must be used with due regard to the flesh.

---

837. சடைபிடித்திழுத்தாற் சந்நியாசி கிட்டவருவான்.

The ascetic will come near if pulled by the hair.

---

838. சமையல்வீட்டிலே முயல் வந்தகப்பட்டால் விடுவார்களா?

If a hare be caught in the cook house will they allow him to escape?

---

839. சந்நியாசியைக் கடித்த நாயிக்குப் பின்னாலே நரகமாம்.

It is said that the dog will hereafter go to hell that bit the ascetic.

---

840. சத்தியமேவெல்லும் அசத்தியமே கொல்லும்.

Truth will conquer, but falsehood will kill.

---

841. சந்தையிலடித்ததற்குச் சாட்சியா?

Is a witness needed on the quarrel that happened in the market place?

---

842. சமுத்திரத்துக்குஞ் சாண்குண்டுக்குமெம்மாத்திரம்?

How great is the difference between the sea and a pit a span deep?

843. சத்திரத்துச்சாப்பாட்டுக்கு அய்யங்கார் உத்தரவோ!

Is the consent of the Brahmin needed in order that one may eat in a choultry?

---

844. சந்நியாசிக்கும் பழயகுணம் போகாது.

The old disposition even of the ascetic will not leave him.

---

845. சளிப்பிடித்ததோ சனியன்பிடித்ததோ!

Has a cold seized him or Saturn!

---

846. சாலாய் வனைந்தாலென்ன சட்டியாய் வனைந்தாலென்ன!

What matters it whether made into a jar or a bason?

---

847. சதுரியப்பூனை மீனிருக்கப் புளியங்காயைக் கொண்டுபோய்விட்டது.

The crafty cat took away the Tamarind fruit tho' the fish was there.

---

848. சாதுரியப்பூனை தயிரிருக்கச் சட்டியைநக்கிற்று.

The crafty cat licked the dish that contained the curds.

---

849. சாடிக்கு மூடிவாய்த்ததுபோல.

As the cover fits the vessel.

850. சாம்பலைத் தின்று வெண்ணெயைப் பூசினது போல.

As one who has eaten ashes rubbed his mouth with butter.

---

851. சாட்டில்லாமற் சாவில்லை.

No death happens without an assignable cause.

---

852. சாவத்துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் மட்டு.

The sea is only knee deep to the man who braves death.

---

853. சாற்றுக்கில்லாத பூசணிக்காய் பந்தலிலேகட்டியாட்டவோ?

Is the pumpkin that is not used for soup to be hung in the shed to be shook?

---

854. சாவாமற்கற்பதே கல்வி பிறரிடத்திலேகாமலுண்பதேயூண்.

It is true learning to learn not to die and real food that is not derived from others.

---

855. சாந்துப்பெட்டி பாம்புப்பெட்டியாயிற்று.

The ointment box has become a snake box.

---

856. சாணேற முழஞ் சறுக்குகிறது.

To advance a span and slip back a cubit.

---

857. சாகிறவரைக்குஞ் சங்கடமானால் வாழுகிறதேக்காலம்!

If till death one has adversity, how is prosperity to be obtained?

858. சாண்பாம்பானாலும் முழத்தடிவேண்டும்.

Though the snake be only a span long, a stick a cubit long is needed to kill it.

---

859. சாதஞ் சிந்தினாற் பொறுக்கலாந் தண்ணீர் சிந்தினாற் பொறுக்கலாமா?

If rice be spilt it may be gathered up, but can water?

---

860. சாணமோதகூடை சவாதுபணவிடை.

Of dung a basket full, of musk a drachm.

---

861. சாகிறநாய் வீட்டின்மேலேறினாற்போல.

As the dying dog ascended the roof.

---

862. சாபிள்ளைப்பெற்றுத் தாலாட்டவா?

Is the still-born child dandled?

---

863. சாபிள்ளைப்பெற்றாலும் மருத்துவிச்சி கூலி தப்பாது.

The midwife will not fail of her hire though the child be still-born.

---

864. சாத்திரம்பொய்யென்றாற் கிரகணத்தைப்பார்.

If astrological calculations be esteemed false, look at the eclipse.

865. சிற்றத்தைபிள்ளையும் பிள்ளையோ செற்றையிற் பல்லியும் பல்லியோ?

Is the child of my aunt a child? or is the lizard in the rubbish a lizard?

---

866. சிறியார்க்கினியது காட்டாதே சேம்புக்குப் புளிவிட்டுக்காய்ச்சாதே.

Do not give sweet-meats to the poor, nor cook chambu leaves with acid.

---

867. சிறுமையிற்கல்வி சிலையிலெழுத்து.

The acquirements of youth are like inscriptions on a stone.

---

868. சிவபூசைக்குள்ளே கரடி.

A bear at Siva Pooja.

---

869. சிறுபிள்ளை செய்த வெள்ளாண்மை விளைந்தாலும் வீடுவந்து சேராது.

Though the labour of a child may yield fruit, it will not be brought to the house.

---

870. சினத்தறுத்த மூக்குச் சிரித்தொட்டவொட்டுமோ?

Will the nose severed in anger be attached by laughing?

---

871. சிவியாருக்கடிமைப்பட்டாற் காவவும் வேணுஞ் சுமக்கவும் வேணும்.

If subject to the Sivya, one must bear on the shoulder, and on the head also.

872. சிற்றுணர்வோரென்றுஞ் சிலுசிலுப்பர்.

Those whose acquirements are the least are the most noisy.

873. சிறகில்லாப்பறவை.

A bird without wings.

874. சிதம்பரசக்கரத்தைப் பேய்பார்ப்பது போல.

As a demon looks at the circle of Chillumbrum.

875. சிறுதுரும்பும் பல்லுக்குத்தவுதவும்.

Even a small rush may be of use as a tooth pick

876. சிரைத்தாற்கூலி சேவித்தாற் சம்பளம்.

A fee when shaving and wages when serving.

877. சிறகுபறிகொடுத்த பறவை போல.

As a bird deprived of its wings.

878. சிறுகச் சிறுகத்தின்றால் மலையையுந் தின்னலாம்.

Though eaten by little and little, even a mountain may be consumed.

879. சிம்பிலே வளையாதது தடியிலே வளையப்போகுதா?

If not bent in the tender twig, will it be so in the matured branch?

880. சிறுமீனெல்லாம் பெருமீனுக்கிரை.

All little fish are food for great fish.

---

881. சிறுகுழந்தையில்லாதவீடும் வீடல்ல, சீரகமிட்டாக் காதகறியுங் கறியல்ல.

A house without children is not a house, nor is that curry which is without cummin seed,

---

882. சிற்றாள்வேலை எட்டாள்வேலைகொள்ளும்.

The labour of the feeble may be a part of the labour of eight.

---

883. சீனியென்றெழுதிநக்கினலினிக்குமா!

If you lick the word sugar, will it be found sweet?

---

884. சீலம்பாயிழம்போய்ச் சீனிசருக்கரைகட்டுமா!

Will an old mat be sent to Ceylon to pack up sugar?

---

885. சீரியர் கெட்டாலுஞ் சீரியர்தான்.

The virtuous though depressed, retain their virtue.

---

886. சீவன்போனாற் கீர்த்தியும்போமா!

Will death extinguish fame?

---

887. சீதைபிறக்கவும் இலங்கையழியவும்.

The birth of Sita is the destruction of Lanka.

---

888. சீக்கிரபுத்தி பலவீனம்.
Hasty counsel is unavailing.

---

889. சீரங்கத்துக்குப்போகிறவன் ஓரியை மாநாப்புப் போட்டது போல
As one going to Seringapatam tied a jackal in a bundle.

---

890. சும்மாவிருந்தாற் சோறுமா வாடாசித்தா காலாட்டுவோம்.
If we remain in indolence, shall we obtain food? O Sitta! come let us bestir ourselves.

---

891. சும்மாவிருந்தவம்மையாருக்கரைப்பணத்திற்றலி போதாதா!
Will not a bridal ornament of half a fanam's value be sufficient for an old maid?

---

892. சுற்றத்துணியுமில்லை, நக்கத்தவிடுமில்லை.
No cloth to put on, and no bran to lick.

---

893. சுரையிடப்பாகல் முளைக்குமா!
If churie be sown, will pakal spring up?

---

894. சுமைதாங்கி சுங்கமிறுப்பதில்லை.
The resting-stead pays no taxes.

---

895. சுண்டைக்காய் காற்பணஞ் சுமைகூலி முக்காற்பணம்.
The price of the chundi fruit is quarter of a fanam, but the charge for bringing it home is three quarters of a fanam.

896. சுகத்துக்குப் பின்துக்கந்துக்கத்துக்குப் பின்சுகம்.
Grief after joy, and joy after grief.

---

897. சுகதுக்கஞ்சுழல் சக்கரம்.
Prosperity and adversity are a revolving wheel.

---

898. சுங்கமுங் கூழுமிருக்கத்தடிக்கும்.
Taxes and gruel continually grow thicker.

---

899. சுடலைஞானம்.
Pious reflections at the funeral pile.

---

900. சுகத்தைப்பெற்றதுமல்லத் தவத்தைப்பெற்றதும ல்ல.
Health is not recovered, nor is penance effected.

---

901. சுட்டமண்ணும் பச்சைமண்ணுமொட்டுமோ?
Will burnt and moist clay cohere?

---

902. சுத்தவீரனுக்குயிர் துரும்பு.
Life is a rush to the really courageous.

---

903. சுடுகெண்டைக்காகக் காவேரியையுடையாதே.
Do not break down the banks of the Cauvery in order to obtain a small fish.

---

904. சுவரிருந்தாற் சித்திரமெழுதலாம்.
Where there is a wall, figures may be painted.

---

905. சுகம்வந்தாற் சந்தோஷப்பட்டுந் துன்பம் வந்தாற்பின்வாங்குவானேன்?
Since he is elated when in health, why does he shrink in sickness?

---

906. சுருதிசுகானுபோக மூன்றுமொத்தால் முத்தி.
When knowledge, happiness and experience (as the fruit of action) harmonize, final emancipation ensues.

---

907. சுடலையிற்போனபிணந்திரும்புமா?
Will the body that has been cast into the funeral pile return?

---

908. சும்மாகிடைக்குமா சோணாசலன்பாதம்?
Will the feet of Chonasalan be obtained without effort?

---

909. சுண்டைக்காயிலேவைக்கிறது பாதி கடிக்கிறதுபாதியா?
To preserve one half of the chundi fruit must you eat the other?

---

910. சுக்கறியாதகஷாயமுண்டா?
Is there any impression without dried ginger?

---

911. சூதானத்துக்கழிவில்லை.
Excessive care prevents destruction.

---

912. சூரியனைக்கையால் மறைத்தது போல.
As the sun was concealed by the hand.

---

913. சூடுகண்டபூனை அடுப்படிக்குச் செல்லாது.
A cat once burnt will shun the fire.

---

914. சூரியனைக்கண்ட பனிபோலேயிருந்தது.
It was like the dew that had seen the sun.

---

915. சூரியனைக்கிரகணம்பரிசித்ததுபோலுன்னைச் சனி துரந்தது.
Like the sun eclipsed, you are under the influence of Saturn.

---

916. சூரியனுடைய பிரகாசத்துக்குமுன்னே மின்மினி விளங்கமாட்டாது.
A glow-worm glitters not in the sun.

---

917. சூடுமிதிக்கிறமாட்டின் வாயைக்கட்டலாமா?
Is the mouth of the ox that treads out the corn muzzled?

---

918. சூத்திலேயடிக்கப்பல்லுப்போயிற்று.
Teeth lost, by being beaten on the bottom.

---

919. செய்தவினைசெய்தவர்ககெய்திடும்.
The effect of moral action will terminate on the actor.

---

920. செல்வஞ்செருக்குகின்றது, வாசற்படி வழுக்குகின்றது.
Wealth inflates, and the door steps are the occasion of ones sliding.

---

921. செட்டியார்சிங்காரிக்கிறதற்குள்ளே பட்டணம்பறி போகின்றது.
Before the merchant had adorned himself, the city is taken as a spoil.

---

922. செட்டியாரேவாருஞ் சந்தையையோட்டுக்கொள்ளும்.
Come merchant and take possession of your stall.

---

923. செருப்புச்சின்னனென்றுகாலைக்குறைப்பார்களா!
Will they make the feet less, because the shoes are small?

---

924. செத்தவாடுகாற்பணஞ் சுமைகூலி முக்காற்பணம்.
Three quarters of a fanam for carrying a dead sheep, worth a quarter of a fanam.

---

925. செத்தவன் பெண்சாதியை இருந்தவன்கைக்கொண்டாற்போல.
As the survivor took the wife of the deceased husband.

---

926. செட்டியை நீலிதொடர்ந்ததுபோல.
As the demon Neeli pursued the merchant.

---

927: செவிடன்பாட்டுக்கேட்ட சம்பந்தம்.
As the deaf heard the song.

---

928. செத்தபாம்பை ஆட்டுகிறன்.
He charms the dead snake.

---

929. செய்யுந்தொழிலெல்லாஞ் சீர்தூக்கிப் பார்க்கில் நெய்யுந்தொழிலுக்கு நிகரில்லை.
Of all the arts, when attentively considered, weaving will be found unequalled.

---

930. செல்வன் சொல்லுக்கஞ்சான், வீரன்போருக்கஞ் சான்.
The rich fears not words, nor the veteran war.

---

931. செத்தவனங்கையிலே வெற்றிலைகொடுத்த சம்பந் தம்.
As beetle given into the hand of the dead.

---

932. செத்தமாட்டை அறுக்காத கத்தி.
A knife that will not cut the dead cow.

---

933. செத்தவன் பிள்ளையிருந்தவனுக்கடைக்கலம்.
The child of the dead is an asylum to the living.

---

934. செலவில்லாத சிங்காரம்போல.

Like decorations that cost nothing.

935. செத்தாற்றெரியுஞ் செட்டியார்வாழ்வு.

When dead, the condition of the merchant will be apparent.

936. செத்தபிணத்துக்கருகே சாம்பிணமழுகிறது.

Dying bodies weeping by the dead.

937. செருப்புக்கொள்ளுகிறது காலுக்கோ தலைக்கோ?

Are sandals to be bought for the feet or for the head.

938. செத்தவன் மேற்கேகிடந்தாலென்ன கிழக்கேகிடந்தாலென்ன?

What matters it whether the head of the corpse be laid to the east or west?

939. செத்தபிணத்துக்குக்கண்ணேன் சிவசிவ ஆண்டிக்குப்பெண்ணேன்!

Of what use is an eye to the dead, or a wife to the mendicant of Siva?

940. செல்லப்பிள்ளை சீலையுடாதாம் பிள்ளைப்பெறுமட்டும்.

The child of the wealthy going naked till she bears a child.

941. செலவோடேசெலவு கெந்தபொடிக்குக்காற்பணம்.
Add to your expenses a quarter of a fanam for fragrant powder.

942. செங்கோல்கோடவெங்குங்கோடும்.
Obliquity in the ruler leads to general depravity.

943. செல்லாப்பணமெங்குஞ் செல்லாது.
Bad coin will not pass any where.

944. செட்டிக்குவெள்ளாண்மை சென்மப்பகை.
There is a radical contrariety between agrigulture and a merchant

945. செம்பாலைக்குக்கரும்பாலைவலிது.
Black iron wood is stronger than red.

946. செருப்பாலடித்துக் குதிரையுங் குடையுங்கொடுக்கிறது.
A horse and umbrella to one after beating him.

947. செட்டிக்குமிறுத்துப்பைக்குமிறுத்தேன்.
I paid both the Chitty and the bag.

948. செய்தார்க்குச் செய்வதுசெத்தபிறகோ?
Shall benefits be requited after death?

949. சென்மக்குருடனுக்குக்கண்கிடைத்ததுபோல.

As one born blind received sight.

---

950. செம்புநடமாடினாற் குயவன் குடிபோய்விடுவான்.

When metal utensils are used, potters may remove their residence.

---

951. சேற்றிலே புதைந்தயானையைக் காகமுங் குட்டும்.

Even the crow will assault with its bill the elephant that sticks in the mud.

---

952. சேதநினைவிற்குப் பூதஞ் சிரிக்கும்.

A demon will laugh at a destructive thought.

---

953. சேற்றிலே நாட்டியகம்பம்போல.

Like a pole fixed in mud.

---

954. சேற்றிலே கிடக்கிற எருமையைத் தூக்குவானோ?

Will he lift up the buffalo that lies in the mud.

---

955. சைக்கனைகாட்டிச் சண்டைக்கழைக்கிறான்.

He calls me to fight by beckoning with the hand.

---

956. சொருகிக்கிடந்த அகப்பையுஞ் சோறள்ளப்புறப்பட்டது.

The ladle that was thrust into the thatched roof as useless is gone to serve out rice.

---

957. சொல்வார்சொன்னாற் கேட்பார்க்குமதியில்லையா?

When another speaks has the hearer no understanding.

---

958. சொன்னதைச் சொல்லுங்கிளி.

A parrot that repeats what was said.

---

959. சொல்லிச் செய்வார் நல்லோர், சொல்லாமற்செய்வார் பெரியோர், சொல்லியுஞ்செய்யாரசடர்.

They who say and do are good; they who say not and do are great, but they who say and do not are bad.

---

960. சொன்னதிருக்கச் சுரைபிடுங்குகிறாய்.

Neglecting what is commanded thou pluckest gourds.

---

961. சொற்கத்தேபோகிலுங் கக்கத்தேறட்டணமேன்?

Of what use is a spinning wheel to one who is going to heaven?

---

962. சொன்னால்வெட்கமழுதாற்றுக்கம்.

When speaking, ashamed; and when weeping, grieved.

963. சோறிடுகிறவன்றன்னாளானாலடிப்பந்தியென்னதலைப்பந்தியென்ன!

When the distributor of rice at the feast is one's own servant, what matters it whether we have the lowest or the highest seat.

---

964. சோற்றைக்கொடுத்துக் கழுத்தையறுக்கிறது.

To cut the throat after giving rice.

---

965. சோற்றிலே கல்லெடுக்கமாட்டாதவன் மோகனக் கல்லெடுப்பானோ!

Will he who cannot pick out a stone from rice lift the transverse stone of a temple vestibule.

---

966. சோற்றுச்சரையோடுதோற்றிவந்த நுள்ளான்.

The ants appeared with the bundle of rice tied up in leaves.

---

967. சோற்றுக்குக் கேடுமண்ணுக்குப்பாரம்.

Loss to the rice and weight to the earth.

---

968. சோம்பேறிக்கு வாழைப்பழந் தோலோடே

A plantain fruit unpealed to the indolent.

---

969. ஞானமெல்லாமொருமூட்டை உலகமெல்லாமொரு கோட்டை.

All wisdom is a bundle and all the world is a fortress.

970. தம்பிகால்நடையே பேச்சுப் பல்லக்கிலே.

The fellow walks on foot, but his words are in a palankeen.

971. தழைந்த மரத்துக்கு நிழலுண்டு பிள்ளைப்பெற்றவளுக்குப் பாலுண்டு.

A flourishing tree affords a shade; and a woman who has born a child has milk.

972. தலையிலெழுத்திருக்கத்தந்திரத்தால் வெல்லலாமா?

Can we overcome by stratagem when fate has determined otherwise?

973. தம்பிபேச்சைத் தண்ணீரிலேயெழுதவேண்டும்.

The talk of the fellow ought to be written in water.

974. தனக்குப் பிறந்தபிள்ளை தவிட்டுக்கழுகிறதாம் ஊரார்பிள்ளைக்கூட்டுக் கலியாணமாம்.

It is said that her own child cries for bran, whilst another's is distinguished by festivities.

975. தகப்பன்வெட்டின கிணறென்று தலைகீழாய் விழுவார்களா?

Will they leap into the well because it was dug by the father?

976. தன்னப்பந்தன்னைச்சுடும் ஒட்டப்பம்வீட்டைச்சுடு
ம்.
Her own bread will burn herself, and the cake baked in the chatty will burn the house.

---

977. தலையெழுத்துக்குத்தலையைச்சிரைத்தாற்போதுமா?
Will the destiny inscribed on the scull be averted by shaving the head?

---

978. தன்வினைதன்னைச்சுடும்.
The deeds of man will burn himself.

---

979. தவிடுதின்பவனை எக்காளமூதச்சொன்னாற்போல.
Like requesting the man who eats bran to blow a trumpet.

---

980. தட்டான்தாய்ப்பொன்னிலும் மாப்பொன்களவெ
டுப்பான்
The gold-smith will not fail to steal a twentieth part of the gold confided to him, even though given to him by his mother.

---

981. தடிக்குமிருந்த மிடாவா?
Are there any earthen pots that will resist the blows of a stick?

---

982. தலையிருக்க வாலாடுமா?
Will the tail wag whilst the head is there?

983. தங்கமுடிசூட்டினாலுந் தங்கள் குணம்விடார்கசடர்.

The low will not abandon their inclinations although invested with a golden crown.

---

984. தட்டிப்பேசுவாரில்லாதிருந்தாற் றம்பிசண்டப்பிரசண்டம்.

Most eloquent when no one is found to dispute.

---

985. தன்னூர்க்கியானை அயலூருக்குப்பூனை.

An elephant in his own country and a cat in a strange country.

---

986. தன் வாயாலேதான்கெட்டான்.

He perished by his own word.

---

987. தலைமேலே தலையிருக்கிறதா?

Is there a head above the head?

---

988. தன்னைப்புகழாத கம்மாளனுமில்லை.

There is no smith who does not boast of himself.

---

989. தங்கத்தைக் குவிக்கிறேனென்றாலுந் தன்புத்திவிடுகிறதில்லையென்கிறான்.

He persists in his judgment although I say I am heaping up gold.

990. தன்குற்றமிருக்கப் பிறர்குற்றம்பார்க்கிறதா?

Is it to censure others whilst guilty himself?

---

991. தலைகீழாயிருந்து தபசுசெய்தாலுங் கூடுகிறகாலம் வந்துதான்கூடவேண்டும்.

Although one perform the most abject penance he must wait the appropriate time for effecting his purpose.

---

992. தன்னிலத்திற்குறுமுயல் தந்தியிலும்வலிது.

Even the hare in his own place is stronger than an elephant.

---

993. தண்டிலேபோனாலிரண்டிலேயொன்று.

When going to war one of two.

---

994. தனக்குச் சந்தேகம் அடைப்பைக்காரனுக்கிரட்டைப்படி.

Uncertain of a supply for himself, a double portion for his servant.

---

995. தன் பெண்டாட்டியைத்தானடிக்கத் தலையாரியைச் சீட்டுக் கேட்ட சம்பந்தம்.

As one asked a warrant of the magistrate to beat his own wife.

---

996. தனக்கழகு மொட்டை பிறர்க்கழகு கொண்டை.

Personal comfort is secured by a shaven head, but the knot is more beautiful to the eyes of others.

---

997. தன்பலங்கொண்டம்பலமேறவேண்டும்.

One must gain ascendency in the assembly by one's own strength.

---

998. தன்பல்லைக்குத்திப் பிறர்மூக்கில் வைக்கலாமா?

Is it right to pick his own teeth and put the dirt to the nose of another?

---

999. தன்வீட்டுக்கதவைப் பிடுங்கி அயல் வீட்டுக்குவை
த்தாற்போல.

Like breaking down his own door and placing it in a neighbour's house.

---

1000. தவிட்டைநம்பிப்போகச்சம்பாவரிசியைநாய்கொ
ண்டுபோயிற்று.

Going in quest of the expected bran his fine rice was carried off by the dog.

---

1001. தட்டானுஞ்செட்டியுமொன்று சட்டியும்பானையு
மண்.

The goldsmith and merchant are one and the bowl and the bason are clay.

1002. தச்சவீட்டிற் பாற்சோற்றை நச்சாதே வெள்ளாளா.

O husbandman! covet not the rice milk of the carpenter.

---

1003. தட்டார்தெருவிலூசிமாற்றலாமா?

Can a needle be changed in the silver-smith street?

---

1004. தன்னூருக்கன்னம் பிறவூருக்குக் காகம்.

A swan in his own and a crow in a foreign country.

---

1005. தலைக்குமிதந்த தண்ணீர் சாணோடியென்னமுழ மோடியென்ன?

If the water be above the head it is of no consequence whether it be a span or a cubit.

---

1006. தகப்பனுக்குக்கட்டக்கோவணத்துக்குவழியில்லை மகன் தஞ்சாவூர்மட்டுநிலபாவாடைபோடச் சொன்னானாம்.

It is said that the son requested cloth to be spread on the road to Tanjore whilst his father was destitute of a waist cloth.

---

1007. தலைக்குத்தலைநாயகம்.

Each one superior to the other.

---

1008. தண்ணீரிலிருக்கிற தவளை குடித்ததைக்கண்டதா ர் குடியாததைக்கண்டதார்.

Who knows whether the frog in the water drank the water or not.

---

1009. தயிருக்குச்சட்டியாதாரஞ் சட்டிக்குத்தயிராதாரம்.

The bowl supports the curds and the curds support the bowl.

---

1010. தன்வீட்டுவிளக்கென்று முத்தமிட்டாற் சுடாதா?

Because his own, will not the flame of a lamp burn him who kisses it?

---

1011. தலைவமயக்கஞ் சருவமயக்கம்.

All is confusion when the chief is deluded.

---

1012. தனக்கு மிஞ்சினது தன்மம்.

What is left belongs to charity.

---

1013. தன்னைக்கொல்லவருகிற பசுவைக்கொல்.

Kill even the cow that attempts to kill you.

---

1014. தனக்கென்னச்சொன்னால் நாய்வெடுக்கென்னப் பாயும்

No matter what advice it may receive, the dog flies at one.

1015. தம்பியுழுவான் மேழியெட்டாது.

The youngster can plough but cannot reach the handle of the plough.

---

1016. தன்னுயிர்போல மன்னுயிர்க்கிரங்கு.

Regard the lives of others as your own.

---

1017. தவளை தன்வாயாற்கெடும்.

The frog is destroyed by its own mouth.

---

1018. தண்ணீர்வெந்நீரானாலுநெருப்பையவிக்கும்.

Though water be heated it will quench fire.

---

1019. தம்பிபிறக்கத்தரைமட்டமாயிற்று.

When the youngster was born all was destroyed.

---

1020. தன்மமேதலைகாக்கும்.

Charity will preserve the head.

---

1021. தன்னுயிரைத்தான்தின்றான்.

He consumed his own life.

---

1022. தலைமேலேயடித்தாலுந் சற்றுங்குனியாய்.

Though hit on the head thou dost not stoop.

---

1023. தலைசொறியக்கொள்ளி தானே தேடிக்கொண்டாய்.

Thou hast procured a fire-brand to scratch thy head.

---

1024. தலைவலிக்குத் தலையணையை மாற்றிப்போட்டாற் போமோ?

Will the head-ache be cured by changing the pillow?

---

1025. தம்பியுடையவன் படைக்கஞ்சான்.

He who has a brother will not quail before a host.

---

1026. தலைநட்டுச் சமுத்திரமேலோடலாமா?

Can one walk through the sea on his head?

---

1027. தன்னையறியாச்சன்னதமுண்டா?

Though a demoniac he knows himself.

---

1028. தருமத்தைப்பாவம் வெல்லாது.

Sin will not conquer virtue.

---

1029. தனக்கு மூக்குப்போனாலுமெதிரிக்குச் சகுனப்பிழைவேண்டும்.

Though one lose his own nose, he is determined to present his adversary with a bad omen.

---

1030. தன்னூரிற்பேச்சுப்பிறவூருக்கேச்சு.
The dialect of one country is barbarous in the estimation of another.

---

1031. தண்ணீரிலே விளைந்த உப்புத் தண்ணீரிலே கரைய வேண்டும்.
The salt that has been produced by water dissolves in water.

---

1032. தனக்கென்றாற் புழுக்கைகலங்கழுவியுண்ணாது.
If for himself, the servant will not wash his dish as a preparation for eating.

---

1033. தண்ணீரிலமுங்கின முட்டை உப்புப்போடக்கிளம்பும்.
The egg that is immersed in water will rise, if salt be added.

---

1034. தலையோடேபோகிறது தலைப்பாவோடேபோனது.
That which was intended for the head befell the turban.

---

1035. தங்கந்தரையிலே ஒருகாசு நாரத்தங்காயுறியிலே.
Whilst the gold is on the ground, the wild orange worth but a cash is on a swinging tray.

---

1036. தகப்பன்பட்டம்பிள்ளைக்கல்லவா!

Does not the child share the honours of its father?

---

1037. தன்னாலேதான்கெட்டாலண்ணாவியென்ன செய்வான்!

If one perish by his own act, what can the teacher do?

---

1038. தம்பிசமர்த்தன் உப்பில்லாக்கஞ்சிகலங்குடிப்பான்.

The fellow is clever: he can drink a gallon of canjy without salt.

---

1039. தலைவலியுங்காய்ச்சலுந்தனக்குவந்தாற்றெரியும்.

When he shall have the head-ache and fever himself, he will know what they are.

---

1040. தடவிப்பிடிக்கமயிரில்லை, அவன்பேர் சவுரியப்பெருமாள்.

Having no hair by which to be seized, he is called a hero.

---

1041. தன்னூர்ச்சுடுகாட்டுக்குமயலூராற்றுக்குமஞ்சவேண்டும்.

One ought to fear the burning place in his own, and rivers in a foreign country.

---

1042. தனக்காகாதபானை உடைந்தாலென்ன தகர்ந்தாலென்ன!

What matters it how a useless vessel be broken?

---

1043. தவிட்டுக்கு வந்த கை தனத்துக்கும் வரும்.

The hand that purloined the bran, will be stretched out for gold,

---

1044. தலையிடித்தாற்றாழக்குனிவான்.

If his head ache, he will bow down.

---

1045. தண்ணீருமூன்றுபிழைபொறுக்கும்.

Even water will afford three opportunities for escape.

---

1046. தலைக்கேறினாற்றனக்குத்தெரியும்.

If it ascend to the head himself will know it.

---

1047, தயிர்ப்பானையையுடைத்துக் காகத்துக்கமுதிட்டாற்போல.

Like breaking the bowl of curds and giving it to the crows.

---

1048. தாய்தூற்றினாலூர் தூற்றும், கொண்டவன்தூற்றினாற் கண்டவன்தூற்றுவான்.

If the mother vilify, the whole country will do so; if the husband vilify, all will so treat his wife when they see her.

1049. தாய்முகங்காணாத பிள்ளைபோல
Like a child who sees not its mother's face.

1050. தாயும்பிள்ளையுமானாலும் வாயும்வயிறும்வேறு.
Though they are mother and child, the mouth and belly are different.

1051. தாயைப்போற்பிள்ளை நூலைப்போற் சீலை.
The child is like its mother and the cloth is like the yarn.

1052. தாயைப்பழித்துமகள் அபசாரியாடுகிறது.
The daughter abuses her mother while she herself is committing whoredom.

1053. தாடிக்குப்பூச்சுற்றலாமா?
Shall the beard be adorned with flowers?

1054. தான்போய்மோரில்லையென்று தயிருக்குச் சீட்டெழுதினானாம்.
It is said that having gone himself without obtaining butter milk, he wrote for curds.

1055. தாய்க்குதவிளைந்தாலுந் தனக்குதவிளையவேண்டும்.
A supply must be yielded for himself as well as his mother.

1056. தான்போக வழியைக்காணாமல் மூஞ்சூறுவிளக்குமாற்றையுங் கவ்விக்கொண்டுபோனதாம்.

The musk rat not having a way for itself carried away the broom.

---

1057. தாய்வார்த்தைகேளாதபிள்ளை நாய்வாயிற் சீலை.

A child not obedient to its mother is like cloth in a dog's mouth.

---

1058. தாமரையிலைத்தண்ணீர் போல.

As water on the lotus leaf.

---

1059. தாபரமில்லாவிளங்கொடிபோல,

As a tendril without support.

---

1060. தான்சாகமருந்துண்பாரில்லை.

There are none who take medicine in order that he may die.

---

1061. தானறியாச் சிங்களந்தன்பிடரிக்குச் சேதம்.

The Cingalese through ignorance brought punishment to his own back.

---

1062. தாயில்லாப்பிள்ளையைத் தலையிலே தட்டலாமா?

Is it fit to beat on the head the motherless child?

1063. தாய்கையிற் பொன்னிலுந் தன்கையிற்றவிடு நன்று.

The bran in his own, is better than gold in his mother's hand.

1064. தாய்முலைப்பாலுக்குப்புப்பார்த்தாற் போல.

As the child tastes its mother's milk to see if it is salt.

1065. தான்கள்வன் பிறரை நம்பான்.

Himself a thief he trusts not others.

1066. தாய்க்குப்பிறகு தாரம்.

Next to the mother is the wife.

1067. தான்றிக்காயிற் சனியன் புகுந்ததுபோல.

As the Saturn entered into the Tandy fruit.

1068. தான்சம்பாதித்தாற்றனக்குதவும் ஊர்சம்பாதித்தாலுதவமாட்டாது.

If acquired by himself it will be of value, but if by the community it will not avail him.

1069. தாய்க்குச்சோறிடுகிறதூருக்குப்புகழ்ச்சியா?

Is the fame of supporting a mother to be spread through the country?

1070. தான்தேடாப்பொன்னுக்குமாற்றுரையில்லை.

He is not careful to test gold not acquired by his own effort.

---

1071. தாய்தவிட்டுக்கழுகையில் பிள்ளையிஞ்சிப் பச்சடி கேட்கின்றது.

Whilst the mother cries for bran, the child asks for chitny.

---

1072. தானாய்க்கனியாதகனி தடிகொண்டடித்தாற்கனியுமா!

Will the fruit ripen by being beaten with a stick that does not ripen spontaneously?

---

1073. தாயெழடிப்பாய்ந்தால்மகளெட்டடிப்பாய்வாள்.

If the mother leap seven feet, the daughter will leap eight.

---

1074. தாயொருபாக்குத்தானை கமுகந்தோப்பு.

The mother is a mere aricanut, but the daughter is a grove of aricanut trees.

---

1075. தாதனும்பறையனும்போல.

Like Tathan and the Parian.

---

1076. தானாகவந்தசீதேவியைக் காலாலுதைத்துத்தள்ளலாமா!

Is it fit to kick the goddess of prosperity that came of her own accord?

1077. தானொன்றைநினைக்கத் தெய்வமொன்றை நினைத்தது.

Whilst we meditate one thing, God determines another.

---

1078. தான்செத்துலகங்கவிழ்ந்தாலென்னநிமிர்ந்தாலென்ன.

What matters it after his death whether the world is erect or turned upside down.

---

1079. தாயைப்பார்த்து மகளைக்கொள்.

Marry the daughter on knowing the mother.

---

1080. தாம்புமறுதல் தோண்டியுமோட்டை.

It is a rope, but rotten; it is a bowl, but cracked.

---

1081. தானுமுண்ணான் பிறருக்குங்கொடான்.

He will not eat himself, nor give to others.

---

1082. தாய்க்குமூத்துத் தகப்பனுக்குவிளக்குப்பிடிக்கிறது.

Senior to his mother, and holding the lamp for his father.

---

1083. தாய்தனக்காகாதமகளூர்தனக்கு நல்லவள்?

Who will esteem the daughter that is not regarded by her mother?

---

1084. தாட்டோட்டக்காரனுக்குத் தயிருஞ்சோறும், விசு
வாசக்காரனுக்கு வெந்நீருஞ்சோறும்.

Curds and rice for the disorderly, and warm water and rice for the virtuous.

---

1085. தான்றின்னத்தவிடில்லை, வாரத்திற்கு வளர்க்கப்
பன்றிக்குட்டி.

He has no bran to eat himself and yet feeds young pigs for hire.

---

1086. தான்பதிவியானால் தேவடியாள்தெருவிலுங் கு
டியிருக்கலாம்.

If one be chaste she may dwell even in a street of harlots.

---

1087. தான்றின்னிபிள்ளைவளர்க்காள் தவிடுதின்னிகோ
ழிவளர்க்காள்.

The woman who eats voraciously will not rear children, nor will she who eats bran rear fowls.

---

1088. திரளெலி வளையெடாது.

A multitudes of rats will not make holes.

---

1089. திறந்தவீட்டிலே நாய்நுழைந்தாற்போல.

As the dog entered the open house.

---

1090. தின்றமண்ணுக்குத்தக்க சோகை.

The jaundice will be in proportion to the sand eaten.

1091. தினைவிதைத்தவன் தினையறுப்பான், வினைவிதைத்தவன் வினையறுப்பான்.

He who sows small grain reaps the same; and he who sows actions reaps the effects.

1092. திக்கற்றவனுக்குத் தெய்வந்துணை.

God is the help of the helpless.

1093. திருடனுக்குத் தெய்வமேசாட்சி.

God is a witness against the thief.

1094. தினவுக்குச் சொறிதலிதம்.

Scratching is agreeable when one itches.

1095. திருவன்கண்ட பச்சையாய்ப்போயிற்று.

It is gone as the emerald found by the jester.

1096. தின்றநஞ்சுகொல்லுந்தின்னாதநஞ்சுகொல்லுமா!

Poison swallowed will kill; will that which is not eaten kill?

1097. திருவிளக்கிட்டாரைத் தெய்வமறியும்; நெய்வார்த்துண்டாரை நெஞ்சறியும்.

God knows those who dedicate to him the sacred lamp, and the mind knows those who eat food prepared with ghee.

---

1098. திங்களுஞ்சனியுந்தெற்கே நோக்கவேண்டும்.

On monday and saturday look south.

---

1099. தின்கத்தெரியாமற்றின்பானேன்?

Why do you eat, if you do not know how?

---

1100. திருட்டு நாயிக்குச் சலங்கை கட்டினாற் போல.

As a bell was tied to the thieving dog.

---

1101. திண்ணைக்குவிடிந்தால்வீட்டுக்குவிடியும்.

If day have dawned on the portico, it has dawned on the house.

---

1102. திருடிக்குத்தெய்வமில்லை அபசாரிக்காணையில்லை.

The thief regards not God, nor does a harlot an oath.

---

1103. திருட்டுப்பூனைக்குப்போடுதேங்காய்ப்பாலுஞ்சோறும்

Place cocoanut milk and rice for a thieving cat.

---

1104. தீவினைசெய்யிற் பேய்வினைசெய்யும்.
Devils will injure those who are vicious.

---

1105. தீட்டின மரத்திலேயோ கதுமைபார்க்கிறது.
Is the keenness of the knife to be tested on the knife board?

---

1106. தீராக்கோபம்பாடாய் முடியும்.
Raging anger ends in ruin.

---

1107. தீராவழக்கிற்குத் தெய்வந்துணை.
God is the arbitrator of inscrutable cases.

---

1108. தீராநெஞ்சுக்குத் தெய்வந்துணை.
God is the help of the distressed mind.

---

1109. தீக்குக்காற்றுதவியானது போல.
As the wind aided the fire.

---

1110. துணைப்போனாலும் பிணைப்போகாதே.
Though you lend your aid, do not become a surety.

---

1111. துள்ளுமான் துள்ளித்துரவில்விழுந்தது.
The bounding deer leaped into the pit.

1112. துறவிக்கு வேந்தன்றுரும்பு.

The devotee estimates royalty as a rush.

---

1113. துள்ளினமாடு பொதிசுமக்கும்.

The restiff ox will carry its burden.

---

1114. துள்ளாதேதுள்ளாதே ஆட்டுக்குட்டி என்கையிலிருக்கிறது பிச்சாக்கத்தி.

Leap not, leap not, O lamb! the knife is in my hand.

---

1115. துழாவிக்காய்ச்சாதது கஞ்சியுமல்ல வினவிக்கட்டாதது கலியாணமுமல்ல.

The unstirred canjy is not good, nor is a marriage without due counsel.

---

1116. துரும்புதூணானாற் றூணென்னவாகவேண்டும்?

If a rush be a pillar, what must the pillar be?

---

1117. துருக்கத்தெருவிலே திருவெம்பாவையா?

May the feast of Tirruvempavi be celebrated in the musselmans' street?

---

1118. துரும்பைத் தூணாக்குகிறதா?

Is a rush to be made into a pillar?

---

1119. துணிந்தார்க்குத் துக்கமுண்டோ?
Do the daring grieve?

---

1120. துடைத்தவிடத்திற்றசை யெடுத்துப் போடுவேன்.
I will remove the flesh from the place that has been cleaned.

---

1121. துட்டப்பிள்ளைக் கூரார் புத்திசொல்லுகிறது.
The vicious child is corrected by any one.

---

1122. துணிந்தானுக்குத் துக்கமில்லை; அழுதவனுக்ககங் காரமில்லை.
The daring have no grief, nor have the sorrowful pride.

---

1123. துரோபதையைத் துகிலுரிந்ததுபோல.
As Tropathy was deprived of her cloth.

---

1124. துர்ச்சனனைக்கண்டாற்றூரநில்.
Stand aloof from the vicious.

---

1125. தூரத்திற்றண்ணீராபத்துக் குதவாது.
The distant water avails nothing in extremities.

---

1126. தூண்டிற்காரனுக்குக் கண்ணெங்கே மிதப்பில ல்லவோ?

Upon what is the eye of the angler fixed? is it not upon his raft?

---

1127. தூரப்போகவேணுமோ கீரைப்பாத்தியிற் கை வைக்க.

Is it necessary to go to a great distance to put the hand into the bed of herbs?

---

1128. தூக்குண்டானால் நோக்குண்டு.

When a present is borne, a favourable look will be obtained.

---

1129. தூங்கினவன் கன்று கடாக்கன்று.

The calf of the sleeper was a male.

---

1130. தூக்கணாங்குருவி குரங்குக்குப் புத்திசொன்னாற் போல.

As the penduline bird gave advice to the monkey.

---

1131. தெய்வம் விடைகொடுத்தாலும் பூசாரிவிடைகொ டான்.

Though the god responds, the priest responds not.

---

1132. தென்றல்முற்றிப் பெருங்காற்றாயிற்று.

The soft south wind became a great wind.

---

1133. தென்னமரத்திலே தேள்கொட்டப் பனைமரத்திலே நெறிகட்டினதுபோல்.

As the scorpion stung the cocoanut tree and the palmira swelled in consequence.

---

1134. தெற்கேயடித்த காற்றுந் திரும்பியடியாதோ?

The south wind that blew, will it not change and blow again?

---

1135. தேங்காய் தின்றவன் தின்னக் கோம்பை சூப்பினவன் தெண்டமிறுக்கிறதோ?

Whilst he who ate the pulp of the cocoanut goes free, shall he who sucked the rind be fined?

---

1136. தேன்தொட்டார் கைநக்காரோ?

Will they not suck the hand who have touched honey?

---

1137. தேள்நெருப்பில் விழுந்தால் எடுத்து விட்டவனைக் கொட்டும்.

A scorpion that falls into the fire, will sting even the man that helps it out.

---

1138. தேய்ந்தாலுஞ் சந்தனக்கட்டை மணம்போகாது.

Friction removes not the scent of the sandal wood.

---

1514. பையிற்கட்டிவைத்த பொருள் பறிகொடுக்கப்பட்டது.
The thing tied up in a bag is carried off.

---

1515. பையமென்றாற் பனையையும் மெல்லலாம்.
By eating slowly, even a palmira tree may be eaten.

---

1516. பொன் முடி, அல்லது சடை முடி.
A gold crown, or platted hair.

---

1517. பொறுத்தாரரசாள்வர் பொங்கினார் காடுறைவர்.
They who are slow to wrath will reign as king's while the precipitate will inherit the desert.

---

1518. பொன்னின் குடத்துக்குப் பொட்டிட வேண்டுமோ?
Is it necessary to put a mark on a golden vessel?

---

1519. பொன்னம்பலமுண்டானாலென்னம்பலங் கிடையாது?
If a golden house be possessed, what kind of house may we not obtain?

---

1520. பொன்னின்கத்தியென்று வயிற்றிலே குத்துகிறதா?
Because the knife is made of gold, is it necessary to run it into one's belly?

---

1521. பொய்யிருந்து புலம்பும் மெய்யிருந்து விழிக்கும்.
Falsehood will weep; truth will be confident.

---

1522. பொற்கலத்துக்கோசையில்லை, வெண்கலத்துக்கெல்லோவோசை.
A golden plate has no sound, but a brass one has.

---

1523. பொய்சொன்னவாய்க்குப் பொரியுங்கிடையாது.
Even parched paddy cannot be obtained for a lying mouth.

---

1524. பொல்லாப்பிள்ளையிலில்லாப்பிள்ளை.
A bad child is worse than no child.

---

1525. பொறுதியென்பது கடலினும் பெரிது.
Forbearance is greater than the ocean.

---

1526. பொருள்போனவழியே துக்கம்போம்.
The grief follows in the track of the lost wealth,

---

1527. பொய்நின்று மெய்யை வெல்லுமா?
Can a lie conquer truth?

---

1528. பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லு.
Though you tell lies do it constantly.

---

1529. பொய்யானபொருளாசை மெய்யானவருளாசை
யை விலக்குகிறது.

The vain desire after riches is destructive of gracious inclinations.

---

1530. பொக்குவாய்ச்சி மெச்சினாளாம் பொரிமாவை.

The toothless dame praised the flour of parched rice.

---

1531. பொற்காப்புக்காசைப்பட்டுப் புலியால் மரணம
டைந்தது.

Was killed by a tiger in consequence of coveting a golden bracelet.

---

1532. பொன்னைவைக்கிற கோயிலிலே பூவையாவது
வைக்க வேண்டும்.

Place at least a flower in the temple where gold is offered.

---

1533. போக்கணங்கெட்டவன் இராசாவினும் பெரியவ
ன்.

He who is impudent is greater than a king.

---

1534. போனமாடு தேடுவாருமில்லை, மேய்த்தகூலி கொ
டுப்பாருமில்லை.

They will not seek the strayed cow nor pay the keeper his hire.

---

1535. போனசுரத்தைப் புளியிட்டழைக்கிறது.

To call back the fever by administering acids.

1537. மவ்விடப்பவ்வாயிற்று.
What was written M. has become P.

---

1538. மந்திரியில்லா யோசனையும் ஆயுதமில்லாச் சேனையும் விழும்.
Council without an adviser, and a host without arms will fall.

---

1539. மலையே விழுந்தாலுந் தலையே தாங்கவேண்டும்.
Though a mountain fall, the head must bear it.

---

1540. மயிருள்ள சீமாட்டி இடதுகையினாலும் வலதுகையினாலும் முடிப்பாள்.
A matron who has tresses will adjust them with both hands.

---

1541. மலைமேலிருப்போரைப் பன்றிபாய்வதுண்டா?
Will the wild hog fall on those seated on a mountain?

---

1542. மணிநாவசையாமல் இராசரிக்கஞ் செய்கிறான்.
Under his government the tongue of the bell does not move.

---

1543. மண்பிள்ளையானாலுந் தன்பிள்ளை.
Though made of clay he prefers his own child.

1544. மலையைத்துளைக்க வாச்சியுளிவந்தாற் போல.
Adzes and chisels were brought to pierce the mountain.

---

1545. மண்டையிலெழுதி மயிராலே மறைத்திருக்கிறது.
To cover with the hair what is written on the scull.

---

1546. மடியிற்கனமுண்டானால் வழியிற்பயமுண்டாம்.
When the waist girdle is weighty, there will be fear on the journey.

---

1547. மதியுமது விதியுமது.
Such is the purpose of thy mind, and such is thy fate.

---

1548. மழைமுகங் காணாத பயிருந் தாய்முகங்காணாதபி ள்ளையும் வாடும்.
Verdure that sees not the rain, and a child that sees not its mother's face, will languish.

---

1549. மழைக்கோபடலிடிக்கோபடல்?
Is the screen for rain, or for a thunderbolt?

---

1550. மகாராசன் கலியாணத்திலே நீராகாரம் நெய்பட் டபாடு.
At the royal wedding, water was as scarce as ghee.

---

1551. மலைவிழுங்குகிறதற்கு மண்ணாங்கட்டி பச்சடியா?

Is it necessary to obtain lumps of earth as sauce, in order to swallow mountains?

---

1552. மலையைமலைதாங்கும், மண்ணாங்கட்டியாதாங்கு
ம்!

A mountain will support a mountain, but will a clod of earth support it?

---

1553. மலைபோலே பிராமணன் போறனாம் பின்குடுமிக்
கு வந்தது சாத்திரம்.

Ceremonies pertaining to the knot of hair at the death of a brahmin who was as big as a mountain.

---

1554. மலையேறினாலும் மச்சினனைக் கைவிடாதே.

Though you are elevated to the mountains forsake not your brother-in-law.

---

1555. மலடியைப் பிள்ளைப்பெறச் சொன்னாற் பெறு
வாளா!

If the barren be commanded to bear, will she obey?

---

1556. மலைபோல வந்ததெல்லாம் பனிபோற்போய்வி
டும்.

That which came as a mountain will disappear as dew.

---

1557. மட்டக்கரியையும் மடப்பளியாரையும் நம்பப்ப டாது.
A young elephant and the caste of madapallies cannot be trusted.

1558. மலடிக்குத்தெரியுமா பிள்ளையைப்பெறும் வருத் தம்?
Do the barren know the pains of child-birth?

1559. மருத்துமாவுக்குச் சயிக்கினை, மடங்காக் குதிரைக் குச் சவுக்கடி.
A sign is enough for the swift steed, but the stubborn horse requires a whip.

1560. மலையிலே விளைந்தாலுமுரலிலேவந்து மசியவே ண்டும்.
Though producéd on the mountains, it must be pounded in a mortar.

1561. மந்திரத்தால் மாங்காய் விழுமா?
Will the mangoe fruit fall before incantations?

1562. மண்வெட்டி கூதலறியுமா?
Is the hoe sensible of cold?

1563. மந்திரமில்லான் பூசையந்திபடுமளவும்.
The devotions of one who is ignorant of the sacred verses last till sunset.

1564. மங்கை தீட்டானாற் கங்கையிலே முழுகுவாள் கங்கை தீட்டானாலெங்கே முழுகுவாள்?

If a maid be defiled she may bathe in ganga, but when ganga herself is defiled, where is she to perform ablutions?

---

1565. மலையிலக்கானாற் குருடனுமெய்வான்.

Even the blind may shoot if a mountain be the target,

---

1566. மறந்து செத்தான், பிராணன்வாவென்றால் வாராது.

He died through forgetfulness; but life will not return at his bidding.

---

1567. மச்சத்தின் குஞ்சுக்கிப்படியென்றால் மாதாவுக்கெப்படியோ!

If it happen thus to the young fish, what may not the old ones expect?

---

1568. மனதறியாப்பொய்யுண்டா?

Are there any lies not known to the mind of the utterer?

---

1569. மண்குதிரையைநம்பி யாற்றிலிறங்கலாமா?

Would it be safe to descend into a river on a clay horse?

---

1570. மண்ணைத்தின்றாலும் மறையத் தின்கவேண்டும்.
Though one eat earth, it must be concealed in eating.

---

1571. மயிர்நுடாடாதார் நட்புச் சிறிது பொருளுடாட்டக்கெடும்.
Though the friendship of two be so close as not to admit a hair between, it will be destroyed by money transactions between the parties.

---

1572. மடைக்கிழவனிலும் புத்தியுள்ளவாலிபனதிகம்.
A prudent youth is better than an old fool.

---

1573. மரமேறிக் கைவிட்டவன் கெட்டான், கடன்வாங்கிக் கடன்கொடுத்தவன் கெட்டான்.
He who having climbed a tree let go his hold, perished; and so did he who lent borrowed money.

---

1574. மழைக்காலிருட்டிலும் மந்திகொம்பிழக்கப்பாயாது.
Even in the darkness of the rainy season, the monkey will not miss its hold of the branch in leaping.

---

1575. மகாமேருவைச் சேர்ந்த காகமும் பொன்னிறம்.
Even the crows of Maha-meru are gold coloured.

---

1576. மருந்து கால் மதி முக்கால்.
The medicine is one quarter, and prudence is three quarters.

---

1577. மக்கள் களவும் வரகு பதரும்.
The pilfering of children and the chaff of small grain.

---

1578. மரநாயிலே புழுகுவழிக்கலாமா!
Can musk be obtained from the wild cat?

---

1579. மழைவிட்டுந் தூவானமாறவில்லை.
Though the rain has ceased, the dropping is not over.

---

1580. மரத்தின் பழம் மரத்தினடியிலே விழும்.
The fruit of the tree will fall at its foot.

---

1581. மவுனம் மலையைச் சாதிக்கும்.
Silence stands against a mountain.

---

1582. மரத்தாலே விழுந்தவனை மாடு குத்துகிறதுபோல,
Like an ox goading a man who has just fallen from a tree.

---

1583. மணற் சோற்றிலே கல்லாராய்கிறதா!
Are stones to be sought in sand rice?

1584. மலைவெட்டி யெலிப்பிடிக்கிறதா?
Do you remove mountains in order to catch rats?

---

1585. மனக்கவலை பலக்குறைவு.
Mental solicitude destroys vigour.

---

1586. மது பிந்துகலகம்.
Confusion from honey drops.

---

1587. மயிர்ச்சுட்டுக் கரியாகுமா?
Can one make charcoal by burning hair?

---

1588. மதில் மேற் பூனை.
A cat on the wall.

---

1589. மடிமாங்காய்போட்டுப் பிடிக்கிறது.
To arrest as a thief one into whose bosom he has put a mangoe.

---

1590. மனிதர் காணும்பொழுதுமவுனம்; இராப்பொழுதி லுருத்திராட்சப் பூனை.
When seen he appears silent, but in the night he is a beaded cat.

---

1591. மனத்திலே பகை, உதட்டிலேயுறவு.
Hate at heart, and friendship at the lip.

---

1592. மரந்தன்னை வெட்டுகிறவனுக்கு நிழல்கொடுக்கும்.
The tree shades the man who fells it.

---

1593. மலையத்தனைசுவாமிக்குத் தினையத்தனை புட்பம்.
Flowers as small as rape seed to a deity as large as a mountain.

---

1594. மலைத்தேன் முடவனுக்கு வருமா?
Can the lame obtain mountain honey?

---

1595. மலையே மண்ணாங்கட்டியாகிறபோது மண்ணாங் கட்டியெப்படியாமோ?
When mountains are lumps of earth, what will be their dimensions?

---

1596. மலையைப்பார்த்து நாய்குலைத்தால் நாய்க்குச்சேதமோ மலைக்குச் சேதமோ?
When a dog barks at a mountain, who is injured—the dog or the mountain?

---

1597. மலையளவுசாமிக்கு மலையளவுபடைக்கிறார்களா?
Is the offering to be as large as a mountain, because the idol is so large?

---

1598. மாமியார்வீடு மகாசவுக்கியம்.
A mother-in-law's house is very comfortable.

---

1599. மாமியாருடைத்தால் மண்சட்டி மருமகளுடைத்தா
ற் பொன்சட்டி.
The pan is earthen when broken by the mother-in-law, but golden if broken by the daughter-in-law.

---

1600. மாட்டின் வாழ்க்கை பூட்டையிலே.
The advantage of the ox is in its burden.

---

1601. மாலைசுற்றிப் பிறந்தபிள்ளைமாமனுக்காகாது.
A child born involved in the after-birth is not advantageous to the uncle.

---

1602. மாடுழக்கிவர வீடுநக்கிவரும்.
If the ox be overworked, the household will suffer loss.

---

1603. மாத்திரை தப்ப மிதித்தாற் கோத்திரங் கூறப்படு
ம்.
If one keeps not time in his steps, his family will be evil spoken of.

---

1604. மாமியார்செத்த ஆறுமாதம் மருமகள்கண்ணிற்
றண்ணீர் வந்தது.
Tears appeared in the eyes of the daughter-in-law six months after the death of the mother-in-law.

---

1605. மாப்புளிக்கிறதெல்லாமப்பத்துக்கு நலம்.
The more the flour is leavened the better the bread.

---

1606. மானமழியிலுயிர்காவலா?
Is life to be preserved by the loss of honor?

---

1607. மாரிபதின்கலநீரிற் கோடைதனிலோர் துடிநீர்வன்மை.
One draught of water in drought is preferable to ten bushels in the rainy season.

---

1608. மாவிலுமொட்டாமல் மாங்காயிலுமொட்டாமல்.
It neither adheres to the flour nor to the mangoe.

---

1609. மாவிற்குத்தக்கபணியாரம்.
The confectionary is equal to the flour.

---

1610. மான்றலையை மனிதன்றலையாக்குவான், மனிதன்றலையை மான்றலையாக்குவான்.
He will transform a deer's head into a man's head; and vice versa.

---

1611. மிகுதியாசை அதிகநட்டம்.
Immoderate desire exposes to correspondent loss.

---

1612. மினைக்கேட்ட அம்பட்டன் பூனையைச் சிரைத்தானாம்.

It is said that the barber being without employment shaved the cat.

---

1613. மிடுக்கன் சரக்கு இருக்கவிலைப்படும்.

Whilst they retain their quality, strong drugs may be sold.

---

1614. மின்னாமல் முழங்காமல் இடிவிழுந்தது போல.

Like the falling of a thunderbolt when there is neither thunder nor lightning.

---

1615. மிதித்தாரைக்கடியாத பாம்பில்லை.

There is no snake that will not bite them who tread on it.

---

1616. மின்மினிப்பூச்சிவெளிச்சத்துக்கிருட்போமோ?

Will the darkness subside in the light of a firefly?

---

1617. மீன்குஞ்சுக்கு நீச்சுப்பழக்க வேண்டுமோ?

Is it necessary to teach young fishes to swim?

---

1618. மீண்டுங்கீரை புளியிட்டுங்கீரை.

Herbs again, and acid with them.

---

1619. முருக்குப்பருத்தென்ன தூணாகப்போகிறதோ?
When the Muruku thorn becomes thick, will it be used as a pillar?

---

1620. முன்னங்கை நீண்டால் முழங்கைநீளும்.
When the hand is stretched out, the elbow will follow it.

---

1621 முதற்கோட முற்றுங்கோடும்.
If crooked at first, it will always be so.

---

1622. முள்ளுக்கு முனைசீவிவிடுவார்களா?
Will they point a thorn?

---

1623. முகமாகாதிருந்தாற் கண்ணாடியென்னசெய்யும்?
What will the mirror effect if the face be ugly?

---

1624. முடவன் சந்தைக்குப்போனாற்போல.
As the cripple went to the bazaar.

---

1625. முடக்குதிரைக்குச் சறுக்கினதுசாட்டு.
Stumbling is the excuse of a lame horse.

---

1626. முளைத்தது மூன்றுமயிர் அதிலிரண்டுமயிர் புழுவெட்டி.
Only three hairs sprung up, of which two are eaten by worms.

1627. முழித்தவன்கன்று நாகுகன்று மூடினவன்கன்று கடாக்கன்று.
The calf of him who watched is a female, but that of him who slept is a male.

---

1628. முட்டரோடாடிய நட்புக்கடுவழியிற் கட்டையூடாடியகால்.
Friendship with the vicious is like a foot wounded on the stump of a tree in a bad road.

---

1629. முன்னளந்தநாழி பின்னுமளக்கும்.
The measure which has been used may be used again.

---

1630. முதுகிலேபுண்ணுண்டானாற் காடுநுழையப்பயம்.
He who has a sore on his back will fear to thread the jungle.

---

1631. முக்காலுங்காகம் முழுகிக்குளித்தாலும் வெள்ளைக்கொக்காகுமோ?
Though he wash three times a day, will the crow become a white crane?

---

632. முலைகொடுத்தவள்மூதேவி முத்தங்கொடுத்தவள்சீதேவி.
She who gave the breast is the goddess of poverty, but she who gave the kiss is the goddess of wealth.

---

1633. முலைக்குத்தையறியுமோ சவலைப்பிள்ளை?
Does the suckling know the pangs of the mother's breast?

---

1634. முன்னேவந்தசெவியைப் பின்னேவந்தகொம்பு மறைக்கிறது.
The ears that first appeared are covered by the new horns.

---

1635. முழுப்பூசணிக்காயைச் சோற்றிலேபுதைக்கிறது.
To bury the whole pumpkin under the rice.

---

1636. முன்னேரங்கப்பற்காரன் பின்னேரம்பிச்சைக்காரன்.
In the morning a ship owner, and in the evening a beggar.

---

1637. முயலையெழுப்பிவிட்டு நாயையுமுச்சுக்காட்டுகிறது.
To set dogs on a hare one has started.

---

1638. முதலேதுர்ப்பலமதிலேகர்ப்பணி.
Already weak and also pregnant.

---

1639. முடவன் கொம்புத்தேனுக்காசைப்பட்டாற் கிடைக்குமா?
Will the lame man obtain the tree honey he longs for?

1640. முயற்சியுடையாரிகழ்ச்சி அடையார்.
The diligent will not be disgraced.

---

1641. முதலைதன்னிடத்து மலையொத்தயானையையும் இழுத்துச்செல்லும்.
The alligator in her own element will drag after her an elephant as large as a mountain.

---

1642. முள்ளிலே புடைவைபோட்டால் மெள்ள எடுக்க வேண்டும்.
When one's cloth is put on thorns, it must be taken off gently.

---

1643. முள்ளாலே முள்ளையெடுக்கவேண்டும்.
A thorn must be extracted by a thorn.

---

1644. முன்னேபோனாற் கடிக்கின்றது; பின்னேபோனா லுதைக்கின்றது.
Biting, if one precedes, and kicking if one follows.

---

1645. முதலுக்குமோசமாயிருக்கின்றது இலாபந்தாவென்கிறான்.
The principal being lost, he asks for profit.

---

1646. முதலெழுத்திலே வெள்ளெழுத்து.
The eye is dim at the first letter.

---

1647. முருங்கைக்காயென்றாற் பத்தியமுறியுமா?
Will the diet be affected by pronouncing the word *murrungakay!*

---

1648. முரட்டுப்பெண்ணுஞ் சுருட்டுப்பாயும்.
An obstinate woman and a mat that recoils on being spread.

---

1649. மூத்ததுமோழை இளையதுகாளை.
The senior is a fool, and the junior an ox.

---

1650. மூக்கைப்பிடித்தால் வாயாவென்னத்தெரியாது.
When his nose is seized, he is at a loss how to breathe.

---

1651. மூர்க்கனும்முதலையுங் கொண்டதுவிடா.
The idiot and the alligator will not relinquish their hold.

---

1652. மூக்குமயிர்பிடுங்கினால் ஆட்பாரங்குறையுமா?
Will the weight of the person be lessened by plucking the hairs of the nose?

---

1653. மூலிகையறிந்தால் மூன்றுலகுமாளலாம்.
A thorough herbalist may govern the three worlds.

---

1654. மூன்றேமுக்கால் நாழிகையிலே முத்துமழைபெய்தது; வாரியெடுக்கமுன்னே மண்மழைபெய்தது.

It rained pearls for three hours and three quarters, but before they were gathered it rained sand.

---

1655. மூடினமுத்து மூன்றுலோகம்பெறும் மூடாதமுத்துமுக்காற்காசும்பெறது.

A concealed pearl is equal in value to the three worlds, whilst an uncovered one is not worth a quarter of a cash.

---

1656. மெத்தப்படித்தவருக்குச் சோறுவெல்லம்.

Boiled rice is as scarce as sugar to the learned.

---

1657. மெல்லெனப்பாயுந் தண்ணீர் கல்லையு முருவிச் செல்லும்.

The water that flows gently will penetrate stones.

---

1658. மெய்சொல்லிவாழாதான் பொய்சொல்லிவாழ்வானோ?

Can he who prospers not by truth succeed by lies?

---

1659. மெத்தப்படித்தவன் சுத்தப்பயித்தியகாரன்.

The erudite is a great fool.

---

1660. மெழுகினவீட்டிலே நாய்மிதித்தாற்போல.
As a dog trod on the smeared floor.

---

1661. மெய்மூன்றாம்பிறை பொய்ப்பூரணசந்திரன்.
Truth is as the moon gibbous, falsehood like the full orb.

---

1662. மேய்கிற கழுதையைக் கூப்பிடுகிற கழுதைகெடுத்தது.
The ass that called the one at pasture injured him.

---

1663. மேய்த்தாற்கழுதைமேய்க்கிறேன்; இல்லாவிட்டாற் பரதேசம்போகிறேனென்கிறான்.
He says, I will either feed asses, or go on a pilgrimage.

---

1664. மொட்டைச்சிக்குத்தக்க மூக்கறையன்.
The noseless man is fit for the bald-headed woman.

---

1665. மொட்டைத்தலையிற் பேன்போல.
Like lice in a bald-head.

---

1666. மோருக்குப்போகிறவனுக்கு முட்டிபிறகாலேயோ?
Is he who goes for buttermilk to conceal the pot behind him?

---

1667. மோந்துகொள்வதுபோற் கடிக்கிறது.
To bite as if kissing.

---

1668. யானைதன்தலையிலே மண்ணை வாரிக் கொட்டிக்
கொள்ளுகிறதுபோல.
Like the elephant throwing sand on his own head.

---

1669. யானைக்கறுபதடி அருந்துள்ளனுக்கெழுபதடி.
To an elephant sixty steps, and seventy to the dwarf.

---

1670. யானைகறுத்தாலாயிரம் பொன்பெறும், பூனைகறு
த்தாலென்னபெறும்!
If a black elephant will fetch a thousand gold coins, what will the black cat be worth?

---

1671. யானையை ஆயிரம்பொன்னுக்குவாங்கி இருப்ப
ங்குசத்திற்கேமாந்து நிற்பானேன்?
Having given a thousand gold coins for an elephant, why hesitate to buy a goad?

---

1672. யானைமிதிக்கப் பிழைப்பார்களா?
Will they survive who have been trampled on by an elephant?

---

1673. யானைமுன்னே முயல்முக்கினதுபோல.
As the hare was stricken before the elephant.

---

1674. யானையைத்தேடக் குடத்துக்குட் கைவைத்தது போல.
As one put his hand into a pot to feel for an elephant.

---

1675. வடக்கத்தையானையும் வயிற்றுவலியையும் நம்பப்படாது.
Neither the colic nor a coast man is to be trusted.

---

1676. வயிற்றுப் பிள்ளையைநம்பி மாடுமேய்க்கிற பிள்ளையைப் பறிகொடுத்தாற்போல.
As one abandoned her child that tended the cows, trusting to the one in the womb.

---

1677. வடலிவெட்டியாள்; எருமைகட்டியாள்.
Preserve young palmiras by cutting, and buffaloes by tying.

---

1678. வணங்கினவிற் றீங்கைவிளைக்கும்.
The bent bow will do injury.

---

1679. வடையைத் தின்னச்சொன்னார்களா, துளையை யெண்ணச்சொன்னார்களா?
Did they tell you to eat the cakes, or to count the holes in them?

---

1680. வரவரமாமியார் கழுதைபோல.
An aunt who gradually becomes like an ass.

---

1681. வருந்தினால் வாராததொன்றில்லை.
There is nothing that may not be obtained by labour.

---

1682. வடுகுகொழுத்தால் வறையோட்டுக்குங்கூடாது.
If the Vadugo becomes fat, he is not worth a broken chatty.

---

1683. வளருங்காயைப் பிஞ்சிலேதெரியும்.
The future fruit may be known as soon as it sets.

---

1684. வண்ணானுக்கு வண்ணாத்திமேலாசை; வண்ணாத்திக்குக் கழுதைமேலாசை.
The washerman loves his wife, and she likes the ass.

---

1685. வளர்த்தநாய் முகத்தைப்பார்க்கிறதுபோல.
As the dog looks at the face of his owner.

---

1686. வவ்வாலனூர்தின்றகனி வாயாலேவாயாலே.
The fruit that was eaten by the bat comes out of its mouth.

---

1687. வல்விலைக்கூறையும் மேல்விலைக்காளையும்.
High-priced cloth and a low-priced bullock.

---

1688. வண்டேறாத மலரில்லை.
There is no flower that insects will not visit.

---

1689. வலியவன்வெட்டினதே வாய்க்கால்.
The channel made by one in power is the one.

---

1690. வலிமைக்கு வழக்கில்லை.
There are no pleadings against the constituted authorities.

---

1691. வயசுக்கோநரைத்தது, மயிருக்கோநரைத்தது?
Is the hair grey by age or of itself?

---

1692. வண்ணான்பிள்ளைசெத்தால் அம்பட்டனுக்குமயிர் போயிற்று.
If the washerman's child die, it is only as the loss of a hair to the barber.

---

1693. வண்ணான்றுறையில் முயல்போல.
Like a hare in the vicinity of washermen.

1694. வல்லவன்பம்பரமணலிலுமாடும்.
The top of the skilful will spin even in sand.

1695. வயிற்றுக்குடலைக் கண்டாலும் வாழைநாரென்கிறீர்கள்.
Though you see intestines you say it is only the fibre of a plantain tree.

1696. வழியிற்கண்டகுதிரைக்கு வைக்கோற்புரி கடிவாளமா?
Is twisted straw sufficient for a bridle for a stray horse?

1697. வண்ணான்கையில் மாற்று.
A change of garments in the hands of the washerman.

1698. வடலிவளர்த்துக் கள்ளுக்குடிக்கிறதா?
Is it to drink toddy after having reared the palmira tree?

1699. வல்லவனுக்குப் புல்லுமாயுதம்.
A blade of grass is a weapon to the powerful.

1700. வண்ணானுக்குவந்தான் வண்ணாத்திக்குப்போனான்
To the washerman he says he is come, and to the wife, he is gone.

---

1701. வண்ணானுக்கும் நிருவாணிக்குமலுவலென்ன?
What has the naked to do with the washerman?

---

1702. வயிறாரஅசனமுமரையாரப் புடைவையுமில்லை.
No food for the cravings of the belly, and no cloth for his waist.

---

1703. வந்தாரெல்லாஞ் சந்தையிற்குடியா?
Are all those who come to the market resident there?

---

1704. வழுவழுத்தவுறவில் வயிரம்பற்றியபகைநன்று.
The greatest enmity is preferable to uncertain friendship.

---

1705. வலியவந்தசீதேவியைக் காலாலுதைத்துத் தள்ளலாமா?
Having come of herself, is it proper to kick, and drive away the goddess of wealth?

---

1706. வளர்த்தகடாய் கையிலேபாய்ந்தது.
The pet goat butted the hand.

1707. வந்தசண்டையை விடுவதுமில்லை வலியச்சண்டைக்குப்போவதுமில்லை.
Neither leaving a quarrel that has taken place, nor of his own accord seeking a quarrel with others.

1708. வருவதுவந்ததேன்றுற் படுவதுபடவேண்டும்.
It is necessary to endure what one has to suffer, if what was to come has transpired.

1709. வயிறுநிறைந்தாற் பானைமூடாதசாதி.
A clan that cover not their cooking utensils when the belly is full.

1710. வழியிற்கிடக்கிற கோடரியை எடுத்துக் காலின் மேற்போட்டுக்கொள்ளுவானேன்?
Why should you take the axe found lying in the road, and put it on your foot?

1711. வாய்நல்லதானூர் நல்லதுதான்.
If the mouth be right, the community will be good.

1712. வாய்தானிருக்கின்றது, வாய்க்கரிசிக்குவழியில்லை.
A mouth there is, but no means of obtaining rice for it.

1713. வாய்த்தவிடுக்போயடுப்பு நெருப்பும்போனது.

The bran for his mouth is gone, and so is the fire of his cook hearth.

---

1714. வாகையிலேயாம்பிஞ்சு கண்டதுண்டோ?

Has any one ever seen the unripe fruit of the Vagey tree?

---

1715. வாயாலேகேட்டால் வாழைக்காய்ப்பிஞ்சுங்கொடான்; தாய்புருஷன்வந்தால் தாற்றோடேகொண்டுபோவான்.

When requested to give a plantain he will not give even an unripe one, but when the mother's husband comes, he carries away the bunch.

---

1716. வாழைப்பழத்திலூசியேறுவதுபோல.

As a needle penetrates a plantain.

---

1717. வாதமூதியறி; வேதமோதியறி.

Understand alchymy by blowing, and the scriptures by study.

---

1718. வாயில்லாவிட்டால் நாய்கொண்டுபோய்விடும்.

Had he no mouth, the dog would carry him off.

---

1719. வாயிலேயுறவு மனதிலேபகை.
Friendship in the mouth, and enmity at heart.

---

1720. வாழ்ந்தவன் வறியவனானால் வறையோட்டுக்குங் கூடான்.
When the opulent become poor, they are not worth a potsherd.

---

1721. வாய்திறக்கப் பொய்பிறக்கும்.
As the mouth opens lies are produced.

---

1722. வாய்க்காலோமெத்தை வரம்போதலைக்குயரம்.
The watercourse a bed, and its embankment a pillow.

---

1723. வாயிலேவாழைப்பழங் கையிலேகறணைக்கிழங்கு
Plantains in the mouth, and in the hand karany roots.

---

1724. வாயிருந்தால் வங்காளம்போகலாம்.
Supposing we have a mouth we may go to Bengal.

---

1725. வாழும்பிள்ளையை மண்விளையாட்டிலேதெரியும்.
The fortunate child may be known when he plays in the sand.

1726. வாய்க்கொழுப்புச் சீலையாலேவடிகிறது.
The fatness of the mouth oozes through cloth.

---

1727. வானமேயீன்றது; பூமியேதங்கினது,
The earth supported what the heavens yielded.

---

1728. வாய்புளித்ததோ மாங்காய்புளித்ததோ?
Is the mouth acid or the mangoes?

---

1729. வாதிகண்ணுக்கு மட்டம்மெட்டுமாற்று.
Inferior gold is estimated by the alchymist as superior.

---

1730, வானத்துக்குள்ளிருந்து மழைக்குப் பயப்படலா மா?
Being in the heavens shall we fear the rain?

---

1731. வாக்கினாற்கெட்டகழுதையைப் போக்கிலேவிடுங் கள்.
Let the ass pass on that was ruined by its words.

---

1732. வாய்மதத்தால் வழக்கிழந்தான்.
He lost his case through his ostentatious words.

---

1733. வானம்பார்க்கவிடைஞ்சலா?

Is there any objection to our gazing at the heavens?

---

1734. வாதுக்காடிய தேவடியாள் வயதுசென்றாற் கழு
தைமேய்ப்பாள்.

When the enchanting harlot becomes old, she will feed asses.

---

1735. வித்தில்லாச்சம்பிரதாயம் மேலுமில்லைக்கீழுமில்
லை.

Their is no effect without a cause either above or below.

---

1736. விரலுவ்வளவானால் உரலெவ்வளவாகாது?

If the finger becomes so thick, what will become of mortar?

---

1737. விளையும்பயிர் முளையிலேதெரியும்.

At its first shooting the plant may be known.

---

1738. விளங்காமடையன் விறகுக்குப்போனால் விறகுகி
டைத்தாலுங் கொடிக்கிடையாது.

Though the idiot obtains fire wood, yet he will not obtain rope to bind it up.

---

1739. விடிந்தும்பெண்ணுக்கு மோட்டாக்கோ?
Is it necessary for a woman to cover herself with a veil after sun-rise?

---

1740. விளையாட்டுப்பிள்ளை விஷத்துக்கஞ்சாது.
Playful children fear not poison.

---

1741. விரல்வீங்கினால் விரலுக்குத்தக்கவீக்கம்.
When the finger swells, the swelling will be proportionate,

---

1742. விசுவாசப்பூனை கருவாட்டைத்தூக்கினதுபோல,
As the devout cat carried away the dried fish,

---

1743. விழுகிறசுவரிலே கைவைப்பானேன்?
Why put one's hand on a tottering wall?

---

1744. விடிந்தாற்றெரியும் மாப்பிள்ளைகுருடும்பெண்பிள்ளை குருடும்,
It may be known at daybreak which is blind, the bridegroom or the bride?

---

1745. விசுவாசக்கொக்கு நடமாடிச்செத்ததாம்,
It is said that the devout crane died dancing.

---

1746. விளக்குக்கேட்டால் இருட்டுக்குச் சீட்டுவிடுவாருண்டோ?
When a lamp is sought, will the chit be sent to the darkness?

---

1747. விளக்கொளிக்காசைகொண்ட விட்டில்போல.
As an insect admiring the brightness of the flame.

---

1748. விழுந்தவனையெடாமலுதைக்கலாமா?
Is it right to kick him who has fallen, instead of helping him up?

---

1749. விழுந்தபிள்ளையையெடுக்க நேரமில்லை.
There is no time even to lift up the fallen child.

---

1750. விளக்கைக்கையிலேபிடித்துக்கொண்டு கிணற்றில்விழுகிறது.
To fall into the well with a lamp in the hand.

---

1751. விளக்குமாற்றுக்குப் பட்டுக்குஞ்சமா?
A silken tassel to the broom.

---

1752. விடியுமட்டும்ராமகதைகேட்டு விடிந்தபின்சீதைக்கு ராமராரென்கிறது.
To inquire at sun-rise what the relationship is between Ramer and Sita after hearing the story of Rama the whole night.

1753. விருந்தில்லாவுணவு மருந்து.
Food taken alone is medicine.

---

1754. விருதுகூறிவந்து செடியினுழையலாமா?
Is it right to hide among the bushes after such professions of courage?

---

1755. விழலுக்கிறைத்த நீர்.
Water drawn in vain.

---

1756. விருதுக்கோ வேட்டையாடுகிறது?
Is it to go a hunting for the sake of a name?

---

1757. விருந்திட்டுப் பகைதேடுகிறது.
To seek enmity by making a feast.

---

1758. விஷத்தைக்குடிக்கப் பாலாமா?
Will poison become milk by being drunk?

---

1759. வித்தையிலெளியது சூனியம்; பன்னத்திலெளியது நீற்றுப்பெட்டி.
Witchcraft is the easiest of all arts, and the common ola basket is the easiest of all plats.

---

1760. விழுங்கினஇரசம் வயிற்றிலிராது.
Quicksilver swallowed will not remain in the belly.

1761. விதிபோகிறவழியே மதிபோகும்.

The mind will follow in the path of destiny.

---

1762. வியாதிக்குமருந்துண்டு விதிக்குமருந்துண்டா?

Medicine may be obtained for disease, but may it be had for destiny?

---

1763. வீடுஅசையாமற்றின்னும்;யானைஅசைந்துதின்னும்.

A house eats without moving; an elephant moves and eats.

---

1764. வீணாவுடைந்தசட்டி வெண்டுண்டு என்தலையிற் பூணாரம் பூண்டபுதுமைதனைக் கண்டதில்லை.

The white piece of a broken chatty is the ornament of my head. O vain man! such a wonder was never before seen.

---

1765. வீட்டுக்குவீரன் காட்டுக்குக்கள்ளன்.

He is courageous at home, and a coward in the jungle.

---

1766. வீடுகட்டமுன்னங் கிணறுவெட்டவேணும்.

The well must be dug before the house is built.

---

1767. வீரம்பேசிக்கொண்டெழுந்த சேவகர் வெட்டுக் களங்கண்டு முதுகிடலாமா?
Can the veteran who rises to war with expressions of bravery retreat on beholding the field of conflict?

———

1768. வீட்டைக்கட்டிக் குரங்கைக்குடிவைத்த சம்பந்தம
Like placing a monkey in the house one has built.

———

1769. வெறுவாய்க்கிலைகேட்டவன் விறகுக்குப்போனா ல் விறகுகிடைத்தாற் கொடிக்கிடையாது. கொடிக் கிடைத்தால் விறகுகிடையாது.
If he who has no beetle for his mouth go to seek fire wood and obtain it, he has no band to tie it with, and if he obtain a band he gets no wood.

———

1770. வெள்ளம்பள்ளத்தைநாடும் விதிபுத்தியைநாடும்
The flood flows into the hollows; and destiny infatuates the understanding.

———

1771. வெங்கலக்கடையிலே யானைபுகுந்ததுபோல.
As an elephant entered a brazier's shop.

———

1772. வெள்ளாடுநனைகிறதென்று வேங்கைப்புலி விழு ந்துவிழுந்தழுகிறதாம்.
The tiger falls and weeps because the sheep is getting wet.

1773. வெள்ளிவட்டிலும்வேணும் விளிம்பிலேபொன்னும்வேணும்.
A silver cup is wanted, and it must have a golden rim.

---

1774. வெட்கத்தாலோல்காதவள் குலஸ்திரீக்குப்போகாது.
She who suffers not from shame is not a modest woman.

---

1775. வெறுவாயைத் தின்றவனுக்கு வெள்ளையவல் கிடைத்ததுபோல.
As white parched rice obtained by one who had nothing to eat.

---

1776. வெட்கத்தாலோல்குகிறவேசி வேசிக்குப்போகாது.
The harlot who is capable of shame is not fit for one.

---

1777. வெட்டைவெளியிலே வையாளிவிடுகிறதா?
Is it necessary to make a road on an open plain?

---

1778. வெள்ளிபோட்டகாலுக்கு வெறுங்காலடிமையா?
Is the bare footed, slave to the foot adorned with silver ornaments?

---

1779. வெச்சனவுக்கன்றி வெண்ணெய்யுருகாது.
Butter does not melt without heat.

---

1780. வெளுத்துவிட்டாலுஞ்சரி சும்மாவிட்டாலுஞ்சரி.
It is the same thing whether they be washed or not.

---

1781. வெள்ளம் வருகிறதற்குமுன்னே அணைபோடவேண்டும்.
The dam must be made before the flood comes.

---

1782. வெறுங்கை முழமிடுமா?
Can the hand alone measure a cubit?

---

1783. வெண்ணெய்யிருக்க நெய்தேடுகிறது.
To seek ghee whilst there is butter.

---

1784. வெண்ணெய்திரண்டுவரத் தாழியுடைந்தது.
The churn broke just as the butter was formed.

---

1785. வெந்நீரிலே வீடுவெந்துபோகாது.
The house will not be consumed by hot water.

---

1786. வெந்ததுபோதும் முன்றானையிலேபோடு.
It is boiled enough; put it in my cloth.

---

1787. வெள்ளாட்டிபெற்றபிள்ளை விடியற்காலத்தேசெத்துப்போயிற்று.
The servant's child died early in the morning.

---

1788. வெல்லஞ்சாப்பிடுகிறவனொருவன் விரல்சூப்புகிறவனொருவன்.
One eating sugar, and another sucking his finger.

---

1789. வெற்றிலைக்குத்தண்ணீரும் வேசைக்குமஞ்சளும் போல.
As water to the beetle leaf, and tumerick to the harlot.

---

1790. வெறும்புளிதின்றாற் பற்கூசும்.
Mere acid will set the teeth on edge.

---

1791. வெந்தபுண் வினைசெய்யாது.
A burnt sore will do no injury.

---

1792. வெயிலிலேபோட்டாலுங் காயான் தண்ணீரிலே போட்டாலுநனையான்.
Though put in the sun he will not be parched, nor wet if put into the water.

---

1793. வேளைக்கரைக்காசாயிரம் பொன்பெறும்.
In peculiar circumstances half a cash may be equal to thousands of gold.

1794. வேண்டாப்பெண்டில் கால்படக்குற்றங்கைபடக் குற்றம்.
The touch both of the hands and feet of a woman not loved is regarded as a fault.

1795. வேலைக்கள்ளிக்குப் பிள்ளைப்பராக்கு.
The indolent woman pleads her care of her child in excuse for not working.

1796 வேப்பெண்ணெய்யுமாபத்துக்குதவும்.
Even margosa oil is of use in extremities.

1797. வேம்புங்கரும்பாச்சேவேற்றிலைப்பூநஞ்சாச்சே.
The margosa is become sugar-cane, and the beetle flower poison.

1798. வேலிபயிரழித்தால் விளைவதெப்படி?
If the fence destroy the herbs, whence the crop?

1799. வேலிக்குப்போட்டமுள்ளுக் காலுக்குத்தைத்தது.
The thorns that were placed as a fence have run into the foot.

1800. வேகிறவீட்டிலே பிடுங்குகிறதிலாபம்.
It is an advantage to abstract goods from a burning house.

1801. வேலையதிகஞ் சம்பளங்கொஞ்சம்.
Plenty of work, but little pay.

1746. விளக்குக்கேட்டால் இருட்டுக்குச் சீட்டுவிடுவாருண்டோ?
When a lamp is sought, will the chit be sent to the darkness?

---

1747. விளக்கொளிக்காசைகொண்ட விட்டில்போல.
As an insect admiring the brightness of the flame.

---

1748. விழுந்தவனையெடாமலுதைக்கலாமா?
Is it right to kick him who has fallen, instead of helping him up?

---

1749. விழுந்தபிள்ளையெடுக்க நேரமில்லை.
There is no time even to lift up the fallen child.

---

1750. விளக்கைக்கையிலேபிடித்துக்கொண்டு கிணற்றில்விழுகிறது.
To fall into the well with a lamp in the hand.

---

1751. விளக்குமாற்றுக்குப் பட்டுக்குஞ்சமா?
A silken tassel to the broom.

---

1752. விடியுமட்டுமிராம ... டு விடிந்தபின்சீதைக்கு ராமனாரென்
To inquire at su ... relationship is between Ram ... hearing the story of Rama

1753. விருந்தில்லாவுணவு மருந்து.
Food taken alone is medicine.

---

1754. விருதுகூறிவந்து செடியினுழையலாமா?
Is it right to hide among the bushes after such professions of courage?

---

1755. விழலுக்கிறைத்த நீர்.
Water drawn in vain.

---

1756. விருதுக்கோ வேட்டையாடுகிறது?
Is it to go a hunting for the sake of a name?

---

1757. விருந்திட்டுப் பகைதேடுகிறது.
To seek enmity by making a feast.

---

1758. விஷத்தைக்குடிக்கப் பாலாமா?
Will poison become milk by being drunk?

---

17 ... த்தையிலெளியது சூனியம்; பன்னத்திலெளிய
... நீற்றுப்பெட்டி.
... craft is the easiest of all arts, and the
... mon ola basket is the easiest of all plats.

---

... னஇதரம் வயிற்றிலிராது.
... lver swallowed will not remain in the

1815. அடுப்புக்கட்டிக் கழகுவேண்டுமோ?
Is the hearth to be adorned?

---

1816. அன்றாக்கியசோறு ஆறுமாதத்திற்குவருமா?
Will the rice cooked on one day be available for six months?

---

1817. அரைவித்தைகொண்டம்பலமேறினால் அரைவித்தைமுழுவித்தையாம்.
When the pedant is privileged to attend the assembly of the learned, he is a finished scholar.

---

1818. அருமைமருமகன்றலைபோனாலும் போகட்டும்; ஆதிகாலத்துரல்போகலாகாது.
The head of my beloved son-in-law may go, but not the old paddy mortar.

---

1819. அடிக்குங்காற்றிலே எடுத்துத்தூற்றுகிறான்.
He winnows as the wind blows.

---

1820. அள்ளிக்கொடுத்தாற்சும்மா அளந்துகொடுத்தாற் கடன்.
If given without measuring it is a gift; if measured it is on credit.

---

1821. அக்காளிருக்கிறவரையிலே மச்சானுறவு.
So long as the elder sister lives, the relationship of brother-in-law subsists.

1822. அபசாரியென்றுயானைமேல்வரலாந் திருடியென்றுதெருவில்வரலாகாது.

A harlot may go forth on an elephant, but a thievish woman may not be seen in the street.

---

1823. அங்குமிருப்பானிங்குமிருப்பானாக்கின சோற்றுக்குப் பங்குமிருப்பான்.

He will be there and here, and at the mess of rice too.

---

1824. அத்தைக்கு மீசைமுளைத்தாற் சித்தப்பாவென்றழைக்கலாம்.

Should my aunt get mustaches she may be called uncle.

---

1825. அக்காள்பகையும் மச்சானுறவுமா?

Is it the enmity of my elder sister and the friendship of my brother-in-law?

---

1826. அடுப்பெரிந்தாற் பொரிப்பொரியும்.

If the fire burn the paddy may be parched.

---

1827. அம்மையாளரைக்காசு தலைசிரைக்கிறது முக்காற் காசு.

Three quarters of a cash for shaving the head of a matron worth half a cash.

---

1828. அளக்கிறநாழி அகவிலையறியுமா?
Does the measure know the price of the corn?

---

1829. அம்மிமிடுக்கோ அரைப்பவள்மிடுக்கோ?
Is the strength in the grinding stone or in the grinder?

---

1830. அடங்காப் பெண்சாதியினாலே அத்தைக்கும்நமக்கும்பொல்லாப்பு.
Through my disobedient wife I and my aunt are at enmity.

---

1831. அழுகிறபிள்ளைக்கு வாழைப்பழங்காட்டியதுபோல.
Like showing a plantain to a crying child.

---

1832. அத்திப்பூவை ஆரறிவார்கள்?
Who knows the flower of the ficus racemosa?

---

1833. அச்சில்லாத் தேரோடாது.
Without axle the chariot will not move.

---

1834. அஞ்சினவனைப் பேயடிக்கும்.
Demons will assault the timorous.

---

1835. அணில்கொம்பிலே ஆமைகிணற்றிலே.
The squirrel is on the bough, and the tortoise in the well.

---

1836. ஆயிரநட்சத்திரங் கூடினாலும் ஒருசந்திரனாகிறதில்லை.
A host of stars are not equal to one moon.

---

1837. ஆண்டிவேஷங்கொண்டுமலைச்சல்விடவில்லை.
Though he has assumed the garb of a mendicant, he is not freed from mental solicitude.

---

1838. ஆவேறுநிறமானாலும் பால்வேறுநிறமாமோ?
Though cows are of different colors, will milk be so?

---

1839. ஆயிரம்பாம்பினுள் ஒருதேரை அகப்பட்டாற்போல.
As a frog was entangled among a thousand snakes.

---

1840. ஆற்றைக்கடந்தல்லோ அக்கரையேறவேண்டும்.
We reach the opposite shore by first crossing the river. Do we not?

---

1841. ஆற்றிற்போட்டாலும் அளந்துபோடவேண்டும்.
Though you cast it into the river, first measure it.

1842. ஆந்தை சிறிதாயிருந்தாலுஞ் சத்தம்பெரிதாயிருக்கின்றது.
Though the owl is small its cry is loud.

---

1843. ஆமைதிடலிலேறினாற்போல.
As the tortoise ascended the mound.

---

1844. ஆற்றைக்கடத்திவிட்டால் ஆகாசமேறக்குளிகைதருவேன்.
Ferry me over the river, and I will give you a medicament by which you may ascend the heavens.

---

1845. ஆற்றுக்குப்போனதுமில்லைச் செருப்புக்கழற்றினதுமில்லை.
He has not been to the river nor has he taken off his shoes.

---

1846. ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு.
Death happens to him of six, and to him of a hundred years.

---

1847. ஆடுகொடுக்காதவிடையன் ஆவைக்கொடுப்பானா!
Will the herdsman give a cow who refused a sheep?

---

1848. ஆமணக்குமுத்து ஆணிமுத்தாகுமா!
Will the castor seed be a precious pearl?

1849. ஆமணக்கைவிதைத்தால் ஆச்சாமுளைக்குமா?
If you sow a castor-oil seed, will an ebony tree be produced?

---

1850. இழவுக்குவந்தவள் தாலி அறுப்பாளா?
Will she who came to the funeral cast away her marriage thaly?

---

1851. இலங்கையைச்சுட்ட குரங்கு.
The monkey that burnt Lanka.

---

1852. இருவராலேஆகாதகாரியம் ஒருவராலேயாகுமா?
Can that be effected by one which two could not accomplish?

---

1853. இரப்பானுக்கு வெறுஞ்சோறுபஞ்சமா?
Is it difficult for the beggar to procure simple rice?

---

1854. இரண்டுவீட்டிலுங் கலியாணம் இடையிலேசெத்தது நாய்க்குட்டி.
A whelp dies between two houses, in both of which there is a marriage festival.

---

1855. இராசன்மகளானாலுந் தன்நாயகனுக்குப்பெண்டு.
Though a king's daughter she is the wife of her husband.

1856. இராசநீதமுண்டானால் தெய்வநீதமுண்டாம்.

When there is royal justice, there will be divine justice.

---

1857. இரவற்சீலையைநம்பித் தன்கந்தையை அடுப்பிற் போட்டதுபோல.

As one put his tattered cloth in the fire, depending on a borrowed one.

---

1858, இன்றைக்குச்செத்தால் நாளைக்கிரண்டுநாள்.

If one die to-day, to-morrow will be the second day.

---

1859. உதைப்பானுக்குவெளுப்பான் சாதிவண்ணான்.

A good washerman will wash for one who kicks him.

---

1860. உழுதவன்கணக்குப்பார்த்தால் உழக்குமிஞ்சாது.

When the farmer takes stock he finds no surplus.

---

1861. உருப்படத் திருப்படும்.

Rehearsal secures divine concurrence.

---

1862. உண்மைசொல்லிக் கெட்டவர்களில்லை.

No one was ever ruined by speaking the truth.

---

1863. உருவியவாளுறையிலிடாத வீரன்.
A veteran who never sheaths his sword.

---

1864. உலகத்துக்கு ஞானம்பேய் ஞானத்துக்குலகம்பேய்.
The world is a demon to religious abstraction, and so religious abstraction is a demon to the world.

---

1865. உப்பைக்கடித்துக்கொண்டுரலை விழுங்கினாற்போல.
As one swallowed the paddy mortar with salt.

---

1866. உள்ளங்கைக்குள்ளே வைகுண்டங்காட்டுவான்.
He will exhibit Vaicundam in the palm of the hand.

---

1867. ஊராரைப் பகைத்து உயிரோடிருந்தவரில்லை.
He who hates the whole community cannot subsist.

---

1868. ஊசிக்கூசியேதிருசிபாயுமா?
Will one needle penetrate another needle entering at the point?

---

1869. ஊருக்காகாதபிள்ளை தாய்க்காகாது.
The child that is unfit for his mother is unsuited for the country.

1870. ஊர்வாய்மூட உலைமூடியுண்டா?

Is there a lid to cover the approach to the country?

---

1871. ஊசிமுனையிலிருந்து தவஞ்செய்தாலும் உபதேசிக்குமோட்சமில்லை.

Though he perform penance on the point of a needle, the religious teacher will not obtain heaven.

---

1872. நெடுந்தச்சும் குறுங்கொல்லும்.

Length to the carpenter and shortness to the smith.

---

1873. பலஉமிதின்றால் ஒருஅவிழ்தட்டும்.

If many husks be eaten perchance a grain may turn up.

---

முற்றிற்று.